# பரிபூர்ண அழகு பராமரிப்பு—

## எவ்வேளையிலும் எங்குமே

.....அதை சாத்தியமாக்குகிறது க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் ஒப்பனை படிமானத்திற்கு உபயோகியுங்கள். ஏனெனில் ஒரு படிமான சாதனத்தைப் போலவே சருமத்தின் மாசுகளை மறைத்து, பட்டுபோன்ற மென்மையை அளிக்கிறது.

ஆனால்.. இதுமட்டுமல்ல லாக்டோ-காலமைனின் பெருமைக்கு காரணம் காலமைன் மற்றும் விட்ச்ஹேசல் கொண்ட லாக்டோ-காலமைன் உங்கள் சருமத்தை இதமாக பேணி போஷிப்பூட்டுகிறது...சுத்தீகரித்து, ஈரத்தன்மையளித்து நயமான மென்மையும் தருகிறது. மேலும் பகல், இரவு எந்நேரத்திலும், எக்காலத்திற்கும் உகந்த அருமையான ஒப்பனை சாதனம் க்ருக்ஸ் லாக்டோ-காலமைன்.

உங்கள் முக எழிலுக்கு உண்மையில் லாக்டோ-காலமைன் தவிர வேறு எதுவுமே வேண்டாம்.

க்ருக்ஸ்
**லாக்டோ-காலமைன்**

மாசில்லா அழகுக்கு!




க்ருக்ஸ் இண்டர்ப்ரான் லிமிடெட்,
பம்பாய்-25

CIL 11 TAM

இப்பொழுது சிறிய சைஸ்களிலும் கிடைக்கிறது

சௌமிய, மார்கழி 20 ● 1970, ஜனவரி 4

# கல்கி
## பொருளடக்கம்



அட்டையில் :

புத்தாண்டு வாழ்த்துக் கூறிப் புதுமலர் கொடுக்கும் குழந்தை.

வண்ணப்படம் : டி. தாமோதர ராவ்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


மயக்கு மருந்தில் போட்டி!
சோஷலிஸம்
இந்தியா
எனக்கு வெறும் பிரசார வார்த்தை வேண்டாம்; உற்பத்தி உயர்வே வேண்டும்.
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 □ இதழ் 23

# சாஸனத்துக்காக ஒரு புரட்சி!

பொது நலனை உறுதி செய்வதற்காக அரசியல் சாஸனத்தை நமது தலைவர்கள் உருவாக்கித் தந்தனர். பின்னர் பல 'திருத்தங்'களை நிறைவேற்றிச் சாஸனத்தை உருக்குலைத்திருக்கிறார்கள். அந்தத் திருத்தங்களை நீக்கி விட்டுப் பரிசீலித்தால் சாஸனத்தின் உட்கருத்தும் நோக்கமும் தெளிவாகப் புலனாகும்.

மக்களுக்கு நலன் பயக்கும் அரசாங்கத்தை வளர்க்க வேண்டும் என்பதே சாஸன நோக்கம். 'சோஷலிஸ்ட்' சமுதாயத்தை வளர்ப்பது அதன் நோக்கமல்ல. மக்களின் நலனைக் கருதி ஆட்சி புரிகின்ற அமைப்பில் பிரஜைகளுக்கு அவசியம் இருந்தாக வேண்டிய ஜீவாதார உரிமைகளுடன் சாஸனம் தொடங்குகிறது. சர்க்காரோ, பார்லிமென்டோ அந்த உரிமைகளில் கை வைக்கலாகாது என்று அரசியல் சாஸனம் கூறுகிறது. பொருளாதாரச் சுதந்திரத்துக்கு இந்த உரிமைகள் அத்தியாவசியமானவையாதலால் அரசியல் சாஸனத்தைத் தயாரித்தவர்கள் உத்தேசித்த ஜனநாயகத்துக்கு அந்த உரிமைகளை அடிப்படைகளாக அமைத்தனர்.

எந்தக் கட்சி மேலோங்கிப் பதவி வகித்தாலும் உண்மையுணர்வுடன் அரசியல் சாஸனத்தைக் கௌரவிக்க அது கடமைப்பட்டிருக்கிறது. வாய்மொழியாகக் கௌரவித்துவிட்டு அதன் அடிப்படைத் தன்மையை மாற்றி, புதிய அரசியல் அமைப்புப் போன்ற ஒன்றை அதற்குப் பதிலாக ஏற்படுத்தலாகாது.

அவசியம் ஏற்படுகையில் அரசியல் சாஸனத்தில் சில அம்சங்களைத் திருத்திக்கொள்வதற்கு வசதி செய்திருக்கிறார்கள். அந்த வசதியைத் தவறாக வியாக்கியானம் செய்து கொண்டு அரசியல் ...ஸனத்தைச் சிதைத்து வருகிறார்கள். திருத்தங்களின் மூலம் மாற்றிக்கொள்ளக்கூடிய சாதாரணச் சட்டம் என்று அரசியல் சாஸனத்தைக் கருதலாகாது. தேர்தல் ஒன்றில் வெற்றி பெற்று ஒரு குறுகிய காலத்துக்கே பதவியைக் கைப்பற்றும் ஒரு கட்சி சாஸனத்தைக் கிழித்தெறிந்து விட்டு, நோக்கத்திலும் காரியத்திலும் முற்றிலும் மாறுபட்ட புதிய சாஸனத்தை உருவாக்குவதற்கு உரிமை பெற்றில்லை. ஆனால் சுதந்திரம் அடைந்த பிறகு மத்திய ஆட்சி பீடத்திலும் ராஜ்யங்களிலும் ஒரே அரசியல் கட்சி ஆதிக்கம் செலுத்த முடிந்ததன் காரணமாக, பதவியை வகித்தவர்கள், எத்தனையோ பாதுகாப்புக்கள் இருந்தும், சுப்ரீம் கோர்ட் தைரியமாக மக்களின் உரிமைகளை உத்தரவாதம் செய்ய முற்பட்டும், அரசியல் சாஸனத்தை நடைமுறையில் மாற்றுவது சாத்தியமாகி விட்டது.

இப்பொழுது சொந்த முறையில் ஏற்பட்டுள்ள போட்டா போட்டியின் விளைவாக காங்கிரஸ் கட்சி இரண்டாகப் பிளவு பட்டுள்ளது. நமது சுதந்திரத்தின் சிற்பிகள் உத்தேசித்த வகையில் இந்திய ஜனநாயகத்தை அரண் செய்து காக்கும் பொறுப்பு தமக்கு இருப்பதாக இந்த இரண்டு கோஷ்டிகளில் எதுவும் நினைக்கவில்லை. நிலைமையின் தேவைக்கு ஏற்பச் சாதாரணச் சட்டத்தை அவ்வப்பொழுது வரும் சர்க்கார்கள் மாற்றிக் கொள்வது போல அரசியல் சாஸனத்தையும் அடியோடு மாற்றுவதற்கு அதிகாரம் இருப்பதாக உரிமை கொண்டாடுகிறார்கள். முதலில் உருவாக்கப்பட்ட அரசியல் சாஸனம் புனிதமானது; திருத்தம் செய்வதற்கு உள்ள அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்து, அவ்வப்பொழுது வரும் பார்லிமென்டும் சர்க்கார்களும் அரசியல் சாஸனத்தை மாற்றுவது தவறு என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது.

சுதந்திரம் பெறுவதற்கு முன் யுத்த காலத்தில் ஏற்பாடான கன்ட்ரோல்கள் பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியாக உருவெடுத்துப் பயங்கரமான நிலைமை தோன்றியுள்ளது. அதன் விளைவாக பார்லிமென்டுடன் கூடிய உண்மையான ஜனநாயக ஆட்சிமுறை சாத்தியமற்றதாகி விட்டது. ஒரு கட்சியும் அதன் தலைவர்களும் கைப்பற்றி வைத்துக் கொண்டிருக்கும் பெர்மிட் லைசென்ஸ் அதிகார முறையை மாற்றி, உண்மையான ஜனநாயக வாழ்வை நோக்கி முன்னேறுவதற்கான யோசனை

களை விவேகிகள் அவ்வப்போது கூறிவந்திருக்கின்றனர். ஆனால் அவை எடுபடவில்லை. பெர்மிட் - லைசென்ஸ் முறையால் பதவியில் உள்ள கட்சி வெளிப்படையாகவும் ரகசியமாகவும், எவ்வித இடையூறுமின்றி, நன்கொடைகளை வரம்பில்லாமல் கறக்க முடிகிறது. எதிர்க் கட்சிகள், தனியாகவோ, ஒன்று சேர்ந்தோ பதவியிலுள்ள அத்தகைய கட்சியை, செலவு அதிகமாகின்ற இப்போதைய தேர்தல்களின் மூலம் அகற்றிவிட இயலாது.

இன்றைய நிலைமையில் தேவைப்படுவது ஒரு புரட்சி. இந்தியாவின் சுதந்திரத்திற்கு வழி செய்தது போன்ற முழுப் புரட்சியாக அது அமைய வேண்டும். பிரிட்டிஷ் அதிகாரத்தை அகற்றுவதற்குப் பயன்பட்ட புரட்சியை விட இதை உருவாக்குவது அதிக சிரமமானது. சுதந்திரத்திற்காகப் புரட்சி செய்தால் சிறைவாசம் அல்லது மரண தண்டனை கிடைக்கும் என்று அந்நிய பிரிட்டிஷ் ஆதிக்கம் சுதந்திர வீரர்களை அச்சுறுத்தியது. இந்தப் பயத்தை விட்டொழிப்பதற்கான வழிகளை காந்திஜி மக்களுக்குச் சொல்லிக் கொடுத்தார். இப்பொழுது மக்களின் பிரதிநிதிகள் நடத்துகின்ற மோசமான ஆட்சியை எதிர்த்துப் புரட்சி செய்தால், அவ்வாறு செய்பவர்கள் பொருளாதார வகையில் நாசத்துக்கு உள்ளாக நேரிடும் என்ற அச்சமே மேலோங்கி நிற்கிறது. சர்க்காரின் கொடுங்கோன்மையால் பாதிக்கப்பட்டு அதை எதிர்க்க வேண்டியவர்கள், அதன் சார்பினராக மாறிவிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. ஒன்றுபட்டு எதிர்ப்பதற்கான சக்தியை உருவாக்க அவர்களால் முடியாத வகையில் பொருளாதார கெடுபிடி பயன்படுகிறது. எப்படியாவது தான் தப்பினால் போதும், தன் சுயநலமே பிரதானம் என்ற நிலைமைக்கு ஒவ்வொருவரும் ஆளாகியிருக்கிறார்கள்.

அச்சுறுத்தல்கள், சிரம நிலைகள் முதலியவை எவ்வாறாக இருந்த போதிலும், நம்மிடம் குறை இருந்த போதிலும், தவறுகளை ஒப்புக்கொண்டு கொடுங்கோன்மையை ஒற்றுமையாக எதிர்த்துத் தாக்கிப் புரட்சி செய்வதென்ற முடிவு ஏற்பட்டாக வேண்டும். அம்மாதிரி துணிந்து செயலாற்றி, போதிய தியாகங்களையும் புரிந்தால் தாய் நாட்டைச் சீர்மைப்படுத்த முடியும். நமது குழந்தைகளும் பேரப் பிள்ளைகளும் வாழ்ந்து வளர்ந்தோங்குவதற்கு ஏற்ப அதைச் சீராக்க முடியும்.

இவ்வகையில் உழைக்காவிடில் இந்நாட்டின் எதிர்காலம் எவ்வாறிருக்கக் கூடும் என்பதைப் பற்றி எல்லோரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நமது சமுதாயம் சர்வாதிகார ஆட்சி முறையின் கீழ் போய்விடும். காலப்போக்கில் இதனினும் அதிக சக்தி வாய்ந்த சர்வாதிகார தேசத்தின் சார்பு நாடாக நாம் ஆகிவிடுவோம்.

சொந்த முறையில் அதிகாரத்துக்கான போட்டியில் ஈடுபடுவது பயனற்றது. சர்வாதிகார ஆட்சி முறையை எதிர்த்து நாகரிகத்துக்காகவும் ஜனநாயகத்துக்காகவும் போரிடுவது தான் முறை. அரசியல் சாஸனத்தில் வழங்கப்பட்டுள்ள ஜீவாதார உரிமைகளை ஜனநாயகத்துக்குக் குழிபறிப்போரும் அவர்களுடன் இணைந்தவர்களும் சேர்ந்து உருக்குலைக்கும்படி விட்டால் ஜனநாயகமும் இராது, நாகரிகமும் இராது. தேச நலனை விடத் தன் பதவியைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே அக்கறையுள்ள ஒரு சர்க்கார் நாச வேலையினருக்கு உதவுபடியாகவே இருப்பர். மக்களின் இயற்கையான காப்பாளராகிய அறிவு படைத்தவர்கள் இந்த நடைமுறையை எதிர்க்கத் தவறினால் அவர்களும் இக்குற்றத்துக்கு உடந்தை என்றே கருதப்படுவர்.

(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

''நடைமுறைக்கு எது இயலும் என்ற உணர்வுடன் நடப்போமாக. காரிய சாத்தியமின்றி எட்டாவில் நிற்கிற திட்டங்கள் நமக்கு வேண்டாம். பிரதமர் கோஷ்டியின் பம்பாய்க் கூட்டம் இவற்றை நாடிப் போகலாம். ஆனால் நாம் இப்படிச் செய்யக் கூடாது'' என்று நிஜலிங்கப்பா கோஷ்டியைச் சேர்ந்த ஸ்ரீ ஸஞ்சீவ ரெட்டி கூறியதாக 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' தெரிவிக்கிறது.

இப்போது ஸ்ரீ ஸஞ்சீவ ரெட்டி எதைக் கூடாது என்கிறாரோ அதை அவரே முன்பு செய்ததில்லையா என்று கேட்கலாம். அது எப்படியாயினும் மேற்படி செய்திப்படி அவர் இப்போது சொல்லியிருப்பது அர்த்தபுஷ்டியுள்ள, விவேகமான, தேச நலனுக்கு உகந்த யோசனையாகும்.

பழைய காங்கிரஸ் புதுக் காங்கிரஸுடன் போட்டி போட்டுக் கொண்டு தீவிர வாதம் செய்யக் கூடாது என்றும், ''நல்ல, நேர்மையான, திறமை வாய்ந்த அரசாங்கத்தை அமைப்பதே அதன் லட்சியமாக இருக்கவேண்டும்'' என்றும் ஆசாரிய கிருபளானி கூறியுள்ளார். சென்ற வாரத்தில் வெளியான வெகு நல்ல செய்தி இதுவே. இந்த நல்லுரை பின்பற்றப்படுமாயின், காங்கிரஸுக்கும் நல்லது; தேசத்துக்கும் நல்லது.

இது பற்றி எழுதும் இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆசிரியர் ஸ்ரீ ஃப்ராங் மொரேஸ், ''இப்போதுள்ள அரசாங்கம் நல்லதாகவும் இல்லை; அதனிடம் திறமை, நேர்மை இவையும் இல்லை'' என்கிறார். இப்படிச் சொல்வது நிர்த்தாட்சிண்யமாகத் தோன்றும். ஆனால் இது தேச நலனைக் குறித்த உண்மையான கவலையில் பிறந்த நிர்த்தாட்சிண்யம்.

நம் இன்னலின் காரணத்தை ஆராய்ந்து ஸ்ரீ மொரேஸ் கூறுவதாவது: ''ஏறக்குறைய அரை நூற்றாண்டுகளாக இந்தியா முதலில் மகாத்மாவையும், பிறகு நேருவையும் எதிர்ப்பேயில்லாத தலைவராகக் கொண்டிருந்தது. இதன் விளைவாக இந்தியாவின் அறிவே இந்த 50 ஆண்டுகளாக முதலில் காந்திஜியிடமும் பிறகு நேருவிடமும் அடகு வைக்கப்பட்டிருந்தது. ஆனால் நேருவின் பொருளாதாரச் சிந்தனையோ மகாத்மாவின் சிந்தனையிலிருந்து

முற்றிலும் மாறுபட்டது. பழைய சம்பவங்களைப் பார்ப்போமாயின், காந்தியின் மரணத்தின்போதே இந்திய மக்கள் சுதந்திரமாகச் சிந்திக்கும் திறனை இழந்துவிட்டதாகக் காண்கிறது. இவ்வாறில்லாவிடில் தேசம் நேருவின் புதிய பொருளாதாரப் போக்கைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றியிராது. காந்தியின் கீழ் ஒரு தலைமுறையின் சிந்தனா சக்தி செயலற்றுப் போயிற்று. அதன் பின் பதினேழு ஆண்டுகள் நேருவின் ஆட்சியில் இந்தியாவின் சிந்தனைத் திறன் மேலும் வலுவிழந்தது.''

எந்த மனிதருக்கும் பயப்படாமல், எந்தப் பிரசார கோஷத்துக்கும் வயப்படாமல் மக்களைச் சுதந்திரமாக, தீரமாகச் சிந்திக்கச் செய்வதுதான் சுதந்திரக் கட்சியின் பணி.

இந்தியாவை மேல் நாடுகள் போல் ஆலைத் தொழில் மயமாக்க முடியுமா என்பதே கேள்வி. அப்படிச் செய்ய முடியுமாயினும், அவ்வாறு செய்வது விவேகமாகாது. மேல் நாட்டில் சிறிய மக்கட் தொகை கொண்ட நாடுகள் செய்வது பெரிய மக்கட் தொகை கொண்ட இந்தியாவுக்குப் பொருந்தாது. விவசாயத்துக்கு உரிய முக்கியத்துவத்தை மறந்து ஆலைத் தொழிலில் அளவுக்கு மீறி ஈடுபட்டதால்தான் அநேக நாடுகள் ஏராளமாகக் கடன்பட்டுள்ளன என்று ஸ்ரீ ஸ்டாஜன் என்ற அறிஞர் ''ஜெர்மன் டிரிப்யூனி''ல் எடுத்துக் காட்டியிருக்கிறார். இனி அபிவிருத்தி காண வேண்டுமாயின், நமக்குக் கடன் தந்தவர்களிடம் தொகையைத் திருப்பித் தரவேண்டியதில்லை என்று நாம் முறையிட்டு உறுதி பெற்றால்தான் முடியும். அதோடு, நமது அந்நியக் கொள்கையைப் பெருமளவுக்கு மாற்றிக்கொண்டு, ராணுவச் செலவைக் குறைக்க வேண்டும். நம்மைச் சுற்றி எதிரிகளையும் சந்தேகாஸ்பதமானவர்களையும் உண்டாக்கிக் கொள்வதற்குப் பதில் நண்பர்களைப் பெற வேண்டும். வெளி நாடுகளுடன் நட்புப் பெற்று அண்டைப்புறத்தாரைப் பலவீனப்படுத்த எண்ணுவதை விட, நேரடியாக அண்டை நாட்டினருடன் நட்புக் கொள்வதே யுக்தமாகும். இதற்கெல்லாம் அடிப்படையாக உலக நாடுகள் நம்மிடம் விசுவாசம் பூண வேண்டுமாயின், நமக்கு ''நல்ல, நேர்மையான, திறமை வாய்ந்த'' அரசாங்கம் வேண்டும்.

இப்போதுள்ள நம் தேச நிலையைக் காணும்போது எனக்கு மனச் சோர்வே உண்டாகிறது. சர்வாதிகாரத்தை நோக்கித் தீர்மானமாகத் திரும்பி யிருக்கிறோம். மனமறிந்தோ, மனமறியாமலோ எப்படிச் சென்றாலும் சரி. ''சர்வாதிகார சோஷலிஸம்'' என்று ஸ்ரீ நிஜலிங்கப்பா திட்டவட்டமாகக் கூறுவதே இன்றைய போக்கு. உற்பத்தி உயர்வுக்கான தேவைகளை மறந்து சோஷலிஸம் பற்றிப் பேசுவதும், சர்க்கார் சர்வாதிகாரத்தின்மூலம் சோஷலிஸம் உண்டாக்க முயலுவதும், இவற்றால் மக்கள் மயக்கமடைவதும் என் உற்சாகத்தைக் குலைக்கின்றன. சர்க்கார் சர்வாதீனத்தால் தேசத்துக்கு க்ஷேமம் உண்டாகாது; உச்சியில் ஏகாதிபத்தியமும் அஸ்திவாரத்தில் அடிமைத்தனமும் கொண்ட ஓர் அமைப்பே உண்டாகும்.

***

''தனியார் துறையின் பலவகைப்பட்ட சாதனைகள் அனைவருக்கும் வெளிப்படையாகத் தெரிபவை. தனியார்த் துறை, தொழில்களைப் பல புதுத் திசைகளில் திருப்பியுள்ளது. ஏற்றுமதிகளைப் பெருக்கி, இறக்குமதிகளைக் குறைத்துள்ளது. சர்க்கார் வருமானத்தில் பாதிக்கு மேற்பட்ட தொகை தனியார் தொழில்கள் செலுத்தும் வரிதான். தனியார் துறையின் சாதனைகள் இவ்வாறிருக்க, இத்துறையை முடக்கிப் போட்டால் அந்த இடத்தில் அமருவதற்குரிய ஆற்றலைச் சர்க்கார் தொழில் துறை பெற்றிருப்பதாக எவ்வித உறுதியும் இல்லை. இது கடந்த இருபதாண்டு அநுபவம் உணர்த்தும் உண்மை. இது சர்க்காருக்கே தெரிந்ததுதான். 'கலப்புப் பொருளாதார'த்தை ஆதரிப்பதாகச் சொல்லிக் கொண்டே தனியார் துறைக்குத் தளைபோடுவது பொருந்தாது'' என்று 'ஹிந்து'வின் (டிச. 25) தலையங்கம் கூறுகிறது. ''ஆட்சி புரியும் கோஷ்டியின் அங்கத்தினருக்கே இதெல்லாம் தெரியும். ஆனால் இதை ஒப்புக்கொண்டு புதிய கொள்கைகளை வகுப்பதற்குத் தேவைப்படும் தைரியம் இல்லை'' என்கிறது 'ஹிந்து'.

இப்படிப்பட்ட ஒரு நெருக்கடிச் சூழலில் பிரதமர் கோஷ்டியும், அவருக்கு எதிர் கோஷ்டியும் சொந்த நோக்கங்களால் ஆட்டுவிக்கப்பட்டு, தேசத்துக்குரிய தொழிற் கொள்கையில் கவனம் செலுத்தாமல், வெறும் வாய்ப்பந்தல் போடுவது நமது துர்ப்பாக்கியம்.

# இசை விழா உரைகள்

மியூஸிக் அகாடெமியில் இவ்வாண்டு தலைமை தாங்கிய மதுரை ஸ்ரீரங்கம் அய்யங்கார் அவர்களின் உரை விநயத்துக்கு விளக்கமாக அமைந்தது. குருகுலவாசமும் குருநாதனின் ஆசியும் எவ்வளவு சக்தி வாய்ந்தவை என்பதை எடுத்துக் காட்டினார். அகாடெமியின் அறிஞர்கள் கூடி இசை விஷயமாகப் பல அரிய முடிவுகளை எடுக்கிறார்கள். இந்த முடிவுகள் பொருள் பெறுவது அவற்றை வித்வான்கள் நடைமுறையில் ஏற்பதால்தான். எனவே அகாடெமியின் நிபுணர்கள் செய்த ஏகோபித்த முடிவுகளை அனைவரும் அநுஷ்டானத்தில் கொண்டுவர வேண்டும் என்று ஸ்ரீரங்கம் அய்யங்கார் கூறியது நியாயம்.

தமிழிசை விழாவின் இவ்வருடத் தலைவர் ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யரவர்கள் பல சீரிய யோசனைகளைக் கூறினார். பள்ளிகளில் எல்லாம் இசைப் பயிற்சிக்கு இடமளித்து, சங்கீதக் கல்லூரிகளில் தேறியவர்களுக்கு அவற்றில் உபாத்திமைத் தொழில் தரவேண்டும் என்று அவர் கூறினார். இது இசைக் கலைஞரின் ஜீவனோபாயத்துக்கு வழி செய்வதோடு, நாட்டில் இசையறிவு பரவவும் வழி செய்யும். (இசையறிவு பரவுவதால் கலை சிறப்பது மட்டுமின்றி, தனி மனிதனின் நடத்தையும் ஆன்மிகத் தரமும்கூட உயரும் என்று அகாடெமி விழாவைத் திறந்து வைத்த தொழிலதிபர் ஸ்ரீ டி. எஸ். ராஜம் கூறியது இங்கு குறிப்பிடத் தக்கது.) மாணவர்களுக்கு இசை நுட்பம் கொண்ட எளிய பாடல்களை முதலில் கற்பித்துவிட்டு, அதன் பின்பே சரளி வரிசைப் பாடம் தொடங்க வேண்டும் என்பது செம்மங்குடியின் இன்னொரு யோசனை. தொடக்கத்திலேயே பதிகங்களைப் பண்ணுடன் பயின்று ஒரு பெரிய இசை மரபைப் படைத்துள்ள ஓதுவாமூர்த்திகளை இதற்கு ஒரு சிறந்த திருஷ்டாந்தமாக அவர் கட்டிக் காட்டினார். தில்லியிலும் ராஜ்யங்களிலும் வருடந்தோறும் வித்வான்களுக்கு விருது வழங்குவதோடு, இவர்களில் பொருளாதார சௌகரியமில்லாதாருக்குப் பென்ஷனும் தரவேண்டும் என்றார் ஸ்ரீ செம்மங்குடி. நிறைய வருமானம் படைத்த தேவஸ்தானங்கள் அடிக்கடி ஆலயத்திலேயே இசைக் கச்சேரிகள் நடத்த வேண்டும் என்றும், இதனால் இசைக் கலைஞர்களுக்கு நன்மை உண்டாவதோடு, இசையும் அதற்குரிய புனிதச் சூழலில் வளரும் என்றார். இதனால் கோவில் சொத்தைப் பிற காரியங்களுக்குப் பயன்படுத்தியதாகாது. ஏனெனில் இறைவனுக்கு உரிய 64 உபசாரங்களில் இசையும் ஒன்றல்லவா என எடுத்துக் காட்டினார். ஈசுவரார்ப்பணம் ஆவதுதான் நம் சங்கீதத்தின் பெருமை. தொழில், விவசாயம், இயற்கை இவற்றைக் குறித்துப் பாடல்கள் பாடப் பெற வேண்டும் என்று இந்த விழாவில் அமைச்சர் திரு மதியழகன் கூறியதற்குப் பதிலைக் கூறாமல் கூறிவிட்டது செம்மங்குடியின் உரை. உலகியல் காரியங்களிலிருந்து மாறுதல் வேண்டியே இசைக்குத் திரும்புகிறோம். இசையிலும் உலகியலையே விஷயமாக்குவதில் பொருள் என்ன இருக்கிறது? உழவரும் மற்றத் தொழிலாளரும் கூட இறைவனைப் பாடியவாறே உழைப்பது நம் மண்ணில் தொன்று தொட்டு வந்துள்ள பண்பு. இதற்கு நேர்மாறாக இசையில் உலகியலைக் கொண்டு வந்தால் நம் நாகரிகத்துக்கே அது முரணாகும்.

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் இவ்வருட விழாவுக்கு அக்ராசனர் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள். தாம் மணி விழா கண்ட ஆண்டில் இதே சொஸைட்டியின் விழாவில் பங்குபெற்ற சிவன், சதாபிஷேகம் கொண்ட இவ்வருடமும் இங்கு தலைமை தாங்கியது குறிப்பிடத்தக்கது. கர்நாடக சங்கீதம் எதிர்காலத்தில் நன்கு விளங்க வேண்டுமே என்பதில் கவலை கொள்ளவும், அதற்குப் பரிகாரம் கூறவும் முற்றிலும் தகுதி பொருந்திய மூதுபெரும் கலைஞர் ஸ்ரீ சிவன் இவ்விஷயமாகத் தாபத்துடன் பேசினார். மக்கள் பெருவாரியாகக் கவரப்படும் சினிமாவில் சாஸ்திரிய சங்கீதத்துக்கு முற்றிலும் மாறான போக்குகள் தலைவிரித்தாடுகின்றன. எளிதில் நரம்பைக் கிண்டும் இந்தக் கபந்த இசைக்கு மக்கள் வசமாகி விட்டனர். இந்தச் சூழ்நிலையில் எதிர் கால இளைஞர்களுக்கு சாஸ்திரிய சங்கீதத்தில் ஈடுபாடு உண்டாகுமா என்பது மிகவும் சந்தேகமே. ஒரு காலத்தில் சினிமாக்களுக்குப் பாடல் இயற்றுவோரில் அக்ர பீடம் வகித்த ஸ்ரீ சிவன், இன்றையப் போக்குக்கு மக்களைக் குறை சொல்வது நியாயமல்ல என்றார். தூய கர்நாடக ராகங்களில் தாம் இயற்றிய சினிமாப் பாடல்களும் அந்த நாட்களில் பொதுமக்கள் அனைவராலும் பெரிதும் விரும்பிப் பாடப்பட்டதை எடுத்துக் காட்டினார். தரக் குறைவான ஒன்றை மக்களுக்குத் தந்து, அவர்களுக்கு அதில் ஈடுபாட்டை உண்டாக்கி விட்ட சினிமா உலகத்தினரே இப்போது கர்நாடக சங்கீதத்தைப் புனர்நிர்மாணிக்க உறுதி பூண வேண்டும் என அறைகூவல் விடுத்தார். சினிமாக்களில் தரமான இசையையே தருவது என்று படத் தயாரிப்பாளர்களும், பாடல் இயற்றுபவர்களும், இசை அமைப்பாளர்களும் உறுதி கொண்டால், நமது புராதன சங்கீதச் செல்வத்துக்குப் பெரும் பணி புரிந்தவராவர்.

இசையின் எதிர்காலத்தைப் பற்றி எண்ணும்போது இளம் பாடகர்களின் விஷயத்தில் கவனம் செலுத்துவது மிக அவசியமாகும். அவர்களால்தானே இசை இனி தழைக்க வேண்டும்? அகாடமி விழாவில் ஸ்ரீ டி. எஸ். ராஜம் இவ் விஷயமாகப் பேசி, சென்ற ஆண்டில் ஸ்ரீமதி எம். எஸ். தலைமையுரையில் குறிப்பிட்டதை வலியுறுத்தினார். அதாவது அகாடமி போன்ற ஸ்தாபனங்கள் **ஒரு ரூபாய்க்கு அதிகமாகக் கட்டணம் இன்றி** இளம் பாடகர்களின் கச்சேரிகளைப் பிரதி மாதமும் நடத்த வேண்டும். பெயரெடுத்த சீனியர் வித்வான்களைவிட, பெயரெடுக்கக் கூடிய ஜூனியர் வித்வான்களுக்கென்றே இப்படி ஓர் ஏற்பாடு செய்தாக வேண்டும்.

ஸ்ரீரங்கம் அய்யங்காரின் யோசனைக்கு இசைக் கலைஞர்களும், செம்மங்குடியின் யோசனைக்கு அரசாங்கமும் தேவஸ்தானங்களும், சிவன் அவர்களின் யோசனைக்குத் திரைப்படத் துறையினரும், ஸ்ரீ டி. எஸ். ராஜம் அவர்களின் யோசனைக்குச் சங்கீத சபைகளும் செவிசாய்த்து ஆவன செய்யுமாக!









1. மியூஸிக் அகாடெமியில் தலைமை உரை நிகழ்த்துகிறார் ஸ்ரீ மதுரை ஸ்ரீரங்கம் அய்யங்கார். 2. அகாடெமி விழாவைத் தொடங்கிவைத்து உரையாற்றுகிறார் ஸ்ரீ டி. எஸ். ராஜம். 3. தமிழிசையில் கோபாலகிருஷ்ண பாரதி பாட்டுப் போட்டிக்கான ராஜாஜியின் தம்புராப் பரிசை செம்மங்குடியிடமிருந்து பெறுகிறார் ஸ்ரீமதி ஆனந்தா பாலசுப்பிரமணியம். 4. செம்மங்குடிக்கு இசைப்பேரறிஞர் விருதினைச் சூட்டுகிறார் மந்திரி திரு மதியழகன். 5. இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் விழாவைத் தொடக்கி வைத்த மந்திரி திரு மாதவன். அருகே அமர்ந்திருப்பவர் இவ்வருடத் தலைவர் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன். 6. மியூஸிக் அகாடெமிக்கு ஸ்ரீ சதாசிவம் அன்பளிப்பாக வழங்கிய சுப்பராம தீக்ஷிதரின் உருவப் படத்தை ஸ்ரீ எம். அனந்தநாராயணன் திறந்து வைத்தார்.









# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பதினைந்தாம் அத்தியாயம்

## காலாமுகர்கள்

உதய சூரியனுடைய செங்கதிர்கள் வந்தியத்தேவனுடைய முகத்தில் சுளீர் என்று பட்டு அவனைத் துயிலெழுப்பி விட்டன. உறக்கம் தெளிந்ததும் எழுந்திருக்க அவனுக்கு மனம் வரவில்லை. கண்ணை விழித்துப் பார்த்தான். சற்றுத் தூரத்தில் பயங்கர ரூபமுள்ள இரண்டு சாமியார்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய திரித்து விட்ட சடை, ஒரு கையில் பிடித்த திரிசூலம், இன்னொரு கையில் அக்கினி குண்டம் இவற்றிலிருந்து அவ்விருவரும் காலாமுக வீர சைவர்கள் என்பதை வந்தியத்தேவன் அறிந்து கொண்டான். இவர்களுடன் வாதப் போர் செய்வதற்கு ஆழ்வார்க்கடியான் இங்கு இல்லையே என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. அந்தக் காலாமுகச் சாமியார்கள் போகும் வரையில் கண்ணை மூடிக் கொண்டு தூங்குவது போல் பாசாங்கு செய்வதென்று தீர்மானித்தான்.

அவர்கள் அவன் பக்கத்தில் வந்து நிற்பதாக அவன் உணர்ந்த போதும் கண்களைத் திறக்கவில்லை. அவர்களில் ஒருவர் அருகில் வந்து கனைத்த போதும் அவன் கண்ணை விழித்துப் பார்க்கவில்லை.

''சிவோஹம்! பையன் நல்ல கும்பகர்ணனாயிருக்கிறான்'' என்றார் ஒருவர்.

''சிவோஹம்! இவனைப் போல் ஒரு வாலிபப் பிள்ளை நமக்குக் கிடைத்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்?'' என்று சொன்னார் இன்னொரு சாமியார்.

''சிவோஹம்! ஆளைப் பார்த்து, முகம் களையாயிருக்கிறதே என்று சொல்லுகிறாய்! இவனால் நமக்குப் பயன் ஒன்றுமில்லை. வெகுசீக்கிரத்தில் இவனுக்கு ஒரு பெரிய ஆபத்து வரப் போகிறது!'' என்றார் முதல் வீர சைவர்.

மேலும் தூங்குவது போல் பாசாங்கு செய்ததனால் மூச்சு விடமுடியாமல் திணறும் உணர்ச்சி வந்தியத் தேவனுக்கு உண்டாயிற்று. எனினும் அச்சமயம் விழித்தெழுந்தால் தன் பாசாங்கு வெளியாகிவிடும். மேலே அவர்கள் ஏதாவது பேசுவதைக் கேட்க முடியாமலும் போய் விடும். தனக்கு என்ன பெரிய ஆபத்து வரப் போகிறது என்பதையும் இவர்கள் ஒரு வேளை சொல்லலாம் அல்லவா?....

ஆனால் அவன் எண்ணிய எண்ணம் நிறைவேறவில்லை.

"சிவோஹம்! அவனவனுடைய தலையெழுத்து! நீ வா போகலாம்!" என்று ஒரு வீர சைவர் கூற, இருவரும் அங்கிருந்து நகர்ந்து சென்றார்கள்.

அவர்கள் சற்றுத் தூரம் போவதற்கு அவகாசம் கொடுத்து விட்டு வந்தியத்தேவன் எழுந்தான். "சீக்கிரத்தில் இவனுக்குப் பெரிய ஆபத்து வரப்போகிறது!" என்ற வார்த்தைகள் அவன் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன.

பழைய காபாலிகர்களின் பரம்பரையில் வந்தவர்கள் காலாமுகர்கள். காபாலிகர்களைப் போல் அவர்கள் நரபலி கொடுப்பதில்லை. மற்றப்படி காபாலிகர்களின் பழக்க வழக்கங்களை அவர்கள் பின்பற்றி வந்தார்கள். அவர்கள் மயானத்தில் அமர்ந்து கோரமான தவங்களைச் செய்து வருங்கால நிகழ்ச்சிகளை அறியும் சக்தி பெற்றிருப்பதாகப் பலர் நம்பினார்கள். சாபம் கொடுக்கும் சக்தி அவர்களுக்கு உண்டு என்றும் பாமர ஜனங்கள் எண்ணினார்கள். ஆகையால் காலாமுக சைவர்களின் கோபத்துக்கு ஆளாகாத வண்ணம் அவர்களுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்யப் பலர் ஆயத்தமாயிருந்தனர். சிற்றரசர்கள் பலர் ஆலயங்களில் காலாமுகர்களுக்கு வழக்கமாக அன்னமளிப்பதற்கு நிவந்தங்கள் விட்டிருந்தனர். இது வரையில் சோழ மன்னர் பரம்பரையைச் சேர்ந்த அரசர்கள் மட்டும் காலாமுகர்களுக்கு எவ்வித ஆதரவும் காட்டவில்லை.

இந்த விவரங்களையெல்லாம் அறிந்திருந்த வந்தியத்தேவன், "அவர்கள் ஏதாவது உளறிக்கொண்டு போகட்டும். இதுவரையில் நேராத ஆபத்து நமக்குப் புதிதாக என்ன வந்து விடப் போகிறது?" என்று எண்ணித் தன்னைத் தானே தைரியப்படுத்திக் கொண்டான். ஆயினும் வருங்காலத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் ஆசை அவன் மனத்தை விட்டு அடியோடு அகன்று விடவில்லை.

வந்தியத் தேவன் எழுந்து நின்று பார்த்த போது அந்தக் காலாமுகர்கள் சற்றுத் தூரத்தில் ஒரு பழைய மண்டபத்தின்



அருகில் போய்க் கொண்டிருப்பதைக் கண்டான். மண்டபத்துக்கு அருகில் செயற்கைக் குன்றம் ஒன்று காணப்பட்டது. அதில் ஒரு குகை சிங்க முகத்துடன் வாயைப் பிளந்து கொண்டிருந்தது. பழைய நாட்களில் திகம்பர ஜைனர்கள் கட்டிக் கொண்டிருந்த அந்தக் குகைகளை காலாமுகர்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

அங்கே சென்று அவர்களுடன் சிறிது பேச்சுக் கொடுத்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் வந்தியத்தேவனுக்கு உண்டாயிற்று. குதிரையைக் கட்டியிருந்த இடத்திலேயே விட்டு விட்டுச் செய் குன்றை நோக்கிப் போனான். மண்டபத்தை நெருங்கியபோது காலாமுகர்கள் குகையின் மறு புறத்தில் நின்று பேசியது அவன் காதில் இலேசாக விழுந்தது.

''அந்தப் பையன் பொய்த் தூக்கம் தூங்க வில்லை. உண்மையாகவேதான் தூங்கியிருக்க வேண்டும்'' என்று சொன்னார் ஒருவர்.

''அது எப்படி நிச்சயமாய்ச் சொல்கிறாய் ?'' என்றான் இன்னொருவன்.

'' 'அபாயம் வரப் போகிறது' என்ற வார்த்தைகளைக் கேட்ட பிறகு, அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்பாத மனிதன் யாரையும் நான் இது வரையில் கண்டதில்லை.''

''பையன் நல்ல தீரனாகத் தோன்றுகிறான். அவனை நம்மோடு சேர்த்துக் கொண்டால் நன்றாய்த்தான் இருக்கும். நீ என்ன சொல்லுகிறாய்?''

''இவனைப் போன்ற வாலிபர்கள் எதற்காக? இன்னும் கொஞ்ச நாளில் இந்தச் சோழ நாட்டின் சிம்மாதனம் ஏறப்



போகிறவனே காலாமுகத்தைச் சேரப் போகிறான்....''

''யாரைச் சொல்லுகிறாய்?''

''வேறு யாரை? மதுராந்தகத் தேவனைத்தான் சொல்லுகிறேன்! இது கூட உனக்குத் தெரியவில்லையா?''

''அது எப்படி? மற்ற இரண்டு பேர்?''

''ஒருவன்தான் கடலில் மூழ்கி இறந்து விட்டானும். இன்னொருவனுடைய காலம் குறுகிக் கொண்டிருக்கிறது....''

வந்தியத்தேவன் அதற்கு மேல் அந்தக் காலாமுகச் சாமியார்களின் பேச்சைக் கேட்கச் சிறிதும் விரும்பவில்லை. அவர்களுடன் பேச்சுக் கொடுக்கவும் எண்ணவில்லை.

விரைவிலே பழையாறையை அடைந்து இளவரசியிடம் செய்தியைச் சொல்லி விட்டுக் காஞ்சிக்குப் போக விரும்பினான். எல்லாருக்கும் மேலாகத் தான் அதிகம் கடமைப்பட்டிருப்பது ஆதித்த கரிகாலருக்கு அல்லவா? அவரை எத்தனையோவித அபாயங்கள் சூழ்ந்திருப்பது உண்மை. பார்த்திபேந்திரன்கூடப் பழுவூர் ராணியின் மாய வலையில் விழுந்து விட்டான். எந்தக் காரியத்திலும் படபடப்புடன் இறங்கக் கூடியவரான ஆதித்த கரிகாலர் எப்போது எந்தவித அபாயத்துக்கு உள்ளாவாரோ, தெரியாது. அவரிடம் சென்று அவரைக் காத்து நிற்பது தன் முதன்மையான கடமை. வழியில் வீண் பொழுது போக்குவது பெருங்குற்றம். இந்தக் கணமே சென்றுவிட வேண்டும்.

வந்தியத் தேவன் சத்தமில்லாமல் திரும்பிச் சென்று குதிரை மீது ஏறிக் கொண்டான். குதிரையை வேகமாகத் தட்டி விட்டான். காலாமுகர்களின் குகையோரமாகச் சென்ற போது அவர்கள் தன்னை வெறித்து நோக்குவதைக் கண்டான். ஒரு முகம் அவன் எப்போதோ பார்த்த முகம் போலத் தோன்றியது. ஆனால் நின்று பார்க்க விருப்பமின்றி மேலே சென்றான்.

வழியில் ஜன நெருக்கமான பல கிராமங்களை அவன் பார்த்தான். அங்கேயெல்லாம் இளவரசர் கடலில் மூழ்கியது பற்றிய செய்தி இன்னும் பரவவில்லை என்று தெரிந்தது. ஏனெனில், ஜனங்கள் சாவதானமாக அவரவர்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். அதுவரையில் நல்லதுதான். இளவரசரைப் பற்றிய செய்தி பழையாறையை அடைவதற்குள் தான் அங்கே போய்ச் சேர்ந்துவிட வேண்டும். இளையபிராட்டியிடம் உண்மையை அறிவித்துவிட வேண்டும். குந்தவை தேவியின் காதில் வேறு விதமான செய்தி விழுந்தால் ஏதாவது விபரீதம் நேரிட்டு விடலாம் அல்லவா? இளைய பிராட்டியாவது நம்புவதற்குத் தயங்கலாம். அந்தக் கொடும்பாளூர் இளவரசி உயிரையே விட்டாலும் விட்டு விடுவாள்!... இந்த எண்ணம் வந்தியத்தேவனுக்கு மிக்க பரபரப்பை உண்டாக்கிற்று. ஆனால் அவனுடைய அவசரம் குதிரைக்குத் தெரியவில்லை. கால்களில் புதிதாக லாடம் அடிக்கப்பட்டிருந்த அக்குதிரை வழக்கமான வேகத்துடனேகூட ஓடமுடியாமல் தத்தளித்தது. கடைசியாகப் பிற்பகலில் சூரியன் அஸ்தமிப்பதற்கு இரண்டு நாழிகை இருந்த போதுதான் பழையாறைக் கோட்டையின் பெரிய சுவர் அவனுக்குப் புலப்பட்டது.

அதோ கோட்டை வாசல் தூக்கையின் கோவில் தெரிகிறது. கோட்டைக்குள் எப்படிப் பிரவேசிக்கிறது என்பதைப் பற்றி எத்தனையோ யோசனைகள் அவன் உள்ளத்தில் மின்னல் வேகத்தில் படை எடுத்து வந்தன. ஆனால் ஒன்றும் காரியசாத்தியமாகத் தோன்றவில்லை. பனை முத்திரை மோதிரமோ இங்கே பயன்படாது. ஏனெனில், அந்த மோதிரத்துடன் வருவான் என்பது முன்னமே கோட்டைக் காவலர்களுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டிருந்தது. இப்போது மோதிரத்தைப் பார்த்ததும் வேறு விசாரணையின்றிச் சிறைப்படுத்தி விடுவார்கள். சின்னப் பழுவேட்டரையரிடம் அவனை அனுப்பி விடுவார்கள். இளைய பிராட்டி குந்தவை தேவியைப் பார்ப்பதற்கு முன்னால் அவ்விதம் அகப்பட்டுக் கொள்ள அவன் சிறிதும் விரும்பவில்லை.

யோசனை செய்தவண்ணம் குதிரையின் வேகத்தை அவன் குறைத்துக் கொண்டு கோட்டை வாசலை நெருங்கிய போது மற்றொரு திசையிலிருந்து ஒரு கூட்டம் வருவதைக் கண்டான். வேல் பிடித்த வீரர்கள், விருதுகளைச் சுமந்தவர்கள், குதிரைகள் மேல் ஏறி வந்தவர்கள், — இவ்வளவு பேருக்கும் நடுவில் தாமரைப் பூ வடிவமாக அமைந்த ஒரு தங்க ரதம். ஆஹா! அந்த ரதத்தில் வீற்றிருப்பது யார்? இளவரசர் மதுராந்தகத் தேவர் அல்லவா? கடம்பூர் அரண்மனையிலும் தஞ்சாவூர்ப் பொக்கிஷ நிலவறையிலும் பார்த்த அதே இளவரசர்தான்!— கோட்டைக்குள் பிரவேசிப்பதற்கு யுக்தி என்னவென்பது உடனே வந்தியத்

தேவன் மனத்தில் தோன்றி அவனுக்கு உணர்ச்சியூட்டி விட்டது.

''ஆபத்து வரப் போகிறது என்ற வார்த்தை காதில் விழுந்தால் அதைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பாதவனை இதுவரை நான் பார்த்ததில்லை.''—இவ்விதம் காலாமுகர்களில் ஒருவர் கூறிய வார்த்தைகள் அவன் மனத்தில் பதிந்திருந்தன. அவனே அந்த ஆவலுக்கு இடங் கொடுத்து விட்டான் அல்லவா? அந்தக் காலாமுகரின் யுக்தியை இங்கே கையாண்டு பார்க்க வேண்டியதுதான்.

தாமரை மலரின் வடிவமான தங்க ரதத்தை நோக்கி வந்தியத்தேவன் களைப்படைந்திருந்த தன் குதிரையை வேகமாகச் செலுத்தினான்.

மதுராந்தகத் தேவருடைய பரிவாரங்களில் யாரும் அவ்விதம் ஒருவன் செய்யக்கூடும் என்று எதிர்பார்க்கவில்லை. ஆகையால் அவனை யாரும் தடுக்க முன் வருவதற்குள் குதிரை ரதத்தின் சமீபத்தை அடைந்துவிட்டது. அந்தச் சமயத்தில் வந்தியத்தேவன் குதிரை மீது எழுந்து நின்றான். ரதத்தில் வீற்றிருந்த மதுராந்தகரை உற்றுப் பார்த்தான். பார்த்து விட்டு, ''ஓ! அபாயம்!'' என்று ஒரு குரலைக் கிளப்பினான். உடனே தடால் என்று குதிரை மீதிருந்து தரையில் விழுந்து உருண்டான். குதிரை சில அடி தூரம் அப்பால் சென்று நின்றது.

இவ்வளவும் சில விநாடி நேரத்தில் நடந்துவிட்டது. மதுராந்தகத் தேவரின் பரிவாரத்தைச் சேர்ந்த சிலர் அவனுடைய குதிரை ரதத்தை நோக்கிப் போவதைக் கண்டு அவசரமாகக் கத்தியை உறையிலிருந்து எடுத்தார்கள். சிலர் வேலை எறிவதற்குக் குறி பார்த்தார்கள். அதற்குள் அவன் குதிரை மேல் நிற்க முயன்று கீழேயும் விழுந்து விட்டபடியால் அவர்களுடைய கவலை நீங்கியது.

பிறகு கீழே விழுந்தவனைப் பார்த்து எல்லாரும் சிரித்தார்கள். மதுராந்தகரும் சிரித்தார். அதற்குள் ரதம் நிறுத்தப்பட்டிருந்தது. அவர் கையைக் காட்டிச் சமிக்ஞை செய்யவே, வீரர்கள் இருவர் வந்தியத்தேவன் அருகில் சென்று அவனைத் தூக்குவதற்குச் சென்றார்கள். அதற்குள் அவனே எழுந்து உட்கார்ந்திருந்தான். வீரர்களுடைய உதவியில்லாமல் குதித்து எழுந்து நின்றான். தான் விழுந்தது பற்றிச் சிறிதும் கவனியாதது போல் இளவரசர் மதுராந்தகரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.



## மிதக்கும் விமான நிலையம்!

பெரிய நகரங்களில் விமான நிலையங்கள் ஒரு விதத்தில் வரப்பிரசாதமாகவும் இன்னொரு விதத்தில் நல்ல வேதனையாகவும் விளங்குகின்றன. துரிதமான போக்கு வரத்துக்கு உதவும் விமானங்கள் இறங்கி ஏறும்போது எழுப்பும் பயங்கரச் சத்தமானது பலருக்கு நரம்புத் தளர்ச்சி ஏற்படுத்தி விடுகிறது! பெரிய விமான நிலையங்களை அமைக்க நெருக்கடி மிகுந்த நகரங்களில் இடம் கிடைப்பதே அரிதாகி வருகிறது.

இத்தகைய பிரச்னைகளைச் சமாளிக்க எதிர் காலத்தில் கடலில் விமான நிலையங்களை அமைக்கலாம் என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர். கரையிலிருந்து சுமார் ஒரு மைல் தள்ளி இந்த விமான நிலையத் தீவு மிதக்கும். காங்கிரீட்டினாலும் பாலி ஸ்டைரின் என்ற பொருளாலும் இந்நிலையத்தை உருவாக்குவது சாத்தியமே என்று பிரிட்டிஷ் நிறுவனங்கள் இரண்டு பல ஆராய்ச்சிகளைப் புரிந்த பின் கூறுகின்றன. கடல் கொந்தளிப்பினாலோ பலமான அலைகளினாலோ பாதிக்கப்படாதவாறு அமைக்கலாம் என்றும் சொல்லப்படுகிறது. மூந்நூறு டன் எடையுள்ள விமானங்கள் இங்கு இறங்கி ஏறலாம். - பி.ஐ.எஸ்.

---

''அவனை இப்படி அருகில் கொண்டு வாருங்கள்!'' என்றார் இளவரசர்.

வீரர் இருவரும் வந்தியத்தேவனைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ரதத்தின் பக்கத்தில் நிறுத்தினார்கள். இன்னமும் அவனுடைய கண்கள் மதுராந்தகர் முகத்தின் பேரிலேயே இருந்தது.

''அப்பனே! நீ யார்?'' என்று இளவரசர் கேட்டார்.

''நான்... நான்தான்! சக்கரவர்த்திப் பெருமானே! என்னைத் தெரியவில்லையா?'' என்றான் வந்தியத்தேவன்.

''என்ன உளறுகிறாய்?.... அடே! நீங்கள் சற்று விலகி நில்லுங்கள்!'' என்றார் மதுராந்தகர் மற்ற வீரர்களைப் பார்த்து. வீரர்கள் விலகினார்கள்.

''என்னை யார் என்று எண்ணிக் கொண்டாய்?'' என்று மறுபடியும் மதுராந்தகர் கேட்டார்.

''மன்னிக்க வேண்டும், இளவரசே! தவறாகச் சொல்லி விட்டேன். தாங்கள் இன்னும்... இன்னும்...'' என்று தட்டுத் தடுமாறிப் பேசினான்.

''இதற்கு முன் எப்பொழுதாவது என்னை நீ பார்த்திருக்கிறாயா?''

''பார்த்திருக்கிறேன்.... இல்லை; பார்த்ததில்லை....''

"என்னைப் பார்த்திருக்கிறாயா? இல்லையா? உண்மையைச் சொல்!"

"நேற்றிலிருந்து நான் உண்மையைச் சொல்வதென்று வைத்திருக்கிறேன். அதனால்தான், நிச்சயமாய்ச் சொல்ல முடியவில்லை!"

"ஓகோ! நேற்று முதல் நீ உண்மை பேசுகிறவனா? நல்ல வேடிக்கை!" என்று மதுராந்தகர் சிரித்தார்.

"அதனால் நிச்சயமாய்ச் சொல்ல முடியாமற் போவானேன்?" என்று மறுபடியும் கேட்டார் மதுராந்தகர்.

"இந்தக் காலத்தில் எதைத்தான் நிச்சயமாய்ச் சொல்ல முடிகிறது? ஒருவரைப் போல் இன்னொருவர் இருக்கிறார். ஒரு நாள் மூடு பல்லக்கில் இருந்தவர் இன்னொரு நாள் ரதத்தில் இருக்கிறார்."

"என்ன சொன்னாய்?" என்று மதுராந்தகர் சிறிது திடுக்கிட்ட குரலில் வினவினார்.

"ஒருவரைப் போல் இன்னொருவர் இருப்பதால் நிச்சயமாய்ச் சொல்ல முடியவில்லை என்றேன்!"

"நான் யாரைப் போல் இருக்கிறேன்?"

"இரண்டு தடவை தங்களை நான் பார்த்திருக்கிறேன். அல்லது தங்களைப் போன்றவரைப் பார்த்திருக்கிறேன். தாங்கள் தாங்கள்தானா அதாவது நான் பார்த்தவர்தானா என்று சந்தேகமாயிருந்தது. அதைத் தெரிந்து கொள்வதற்காகத்தான்... சற்றுமுன்..."

"குதிரை மேல் ஏறி நின்று அப்படி உற்றுப் பார்த்தாயா?"

"ஆம், ஐயா!"

"என்ன தெரிந்து கொண்டாய்?"

"தாங்கள் நான் பார்த்தவராகவும் இருக்கலாம், இல்லாமலுமிருக்கலாம் என்று தெரிந்து கொண்டேன்."

மதுராந்தகருக்குக் கோபம் உண்டாகத் தொடங்கியதென்பது அவருடைய முகத்திலிருந்தும் குரலின் தொனியிலிருந்தும் தெரிந்தது.

"நீ சுத்தப் போக்கிரி. உன்னை...."

"இளவரசே! கோபிக்க வேண்டாம். நான் தங்களையோ, தங்களைப் போன்றவரையோ பார்த்தது எங்கே என்று சொல்கிறேன். பிறகு, தாங்களே நிதானித்துக் கொள்ளலாம்."

"அப்படியானால் சொல், சீக்கிரம்!"

"ஒரு பெரிய கோட்டை. நாலாபுறமும் நெடிய மதில் சுவர். வீராதி வீரர்கள் பலர் அங்கே கூடியிருந்தார்கள். நடு ராத்திரி. சுவரில் மாட்டிய பெரிய அகல் விளக்கிலிருந்து புகையினால் மங்கிய வெளிச்சத்தில் அவர்கள் ஆத்திரமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். சுவர் ஓரமாக ஒரு பல்லக்கு இருந்தது. அந்த வீரர்களின் தலைவரை மற்றவர்கள் ஏதோ கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டார்கள். அவருக்குக் கோபம் வந்து விட்டது. வேகமாக எழுந்து போய்ப் பல்லக்கின் அருகில் நின்றார். பல்லக்கை மூடியிருந்த பட்டுத் திரையை விலக்கினார். பல்லக்கின் உள்ளேயிருந்து ஒரு சுந்தர புருஷர் வெளியே வந்தார். அவரைப் பார்த்ததும் அங்கே கூடியிருந்த வீரர்கள் அனைவரும் 'வாழ்க! வாழ்க!' என்று கோஷித்தார்கள். 'பட்டத்து இளவரசர் வாழ்க!' என்றும் சிலர் கூவினார்கள். 'சக்கரவர்த்திக்கு ஜே!' என்று கோஷித்ததாகவும் ஞாபகம். ஐயா! அப்போது பல்லக்கிலிருந்து வெளிவந்தவருடைய முகம் தங்கள் முகம் போலத்தான் இருந்தது. ஏதாவது நான் தவறாகச் சொல்லியிருந்தால் தயவுசெய்து மன்னிக்க வேண்டும்."

நடுவில் குறுக்கிடாமல் இத்தனை நேரம் கேட்டுக் கொண்டிருந்த மதுராந்தகத் தேவருடைய நெற்றியில் வியர்வை துளிக்கலாயிற்று. அவருடைய முகத்தில் பயத்தின் சாயை படர்ந்தது.

"நேற்று முதல் உண்மை சொல்லுகிறவனே! அந்த வீரர்களின் கூட்டத்தில் நீ இருந்தாயா?" என்று கேட்டார்.

"இல்லை, ஐயா! சத்தியமாக இல்லை."

"பின் எப்படிக் கூட இருந்து பார்த்தது போலச் சொல்லுகிறாய்?"

"நான் கண்ட காட்சி உண்மையாக நடந்ததா அல்லது கனவிலே கண்டதா என்று எனக்கே நிச்சயமாகத் தெரிய

வில்லை. இன்னொரு காட்சியையும் கேளுங்கள். இருள் அடர்ந்த ஒரு நிலவறை. அதில் ஒரு சுரங்கப் பாதை. வளைந்து வளைந்து கீழே இறங்கி மேலே ஏறிப் போக வேண்டிய பாதை. அதன் வழியாக மூன்று பேர் வந்து கொண்டிருந்தார்கள். முன்னால் ஒருவன் தீவர்த்தி பிடித்துக் கொண்டு போனான். பின்னால் ஒருவன் காவல் புரிந்து கொண்டு வந்தான். நடுவில் ஒரு சுந்தர புருஷர் — வடிவத்தில் மன்மதனை ஒத்த ராஜகுமாரர்—வந்து கொண்டிருந்தார். தீவர்த்தியின் வெளிச்சம் அந்த நிலவறையின் மூலை முடுக்குகளில் பரவிய போது, அங்கேயெல்லாம் பொன்னும் மணியும் வைடூரியங்களும் ஜொலிப்பது போலத் தோன்றியது. அது மன்னாதி மன்னர்களின் இரகசியப் பொக்கிஷங்களை வைக்கும் நிலவறையாக இருக்கலாம் என்று தோன்றியது. தூண்களில் கோரமான பூத வடிவங்கள் செதுக்கப்பட்டிருந்தன. அத்தகைய சுரங்க வழியில் வந்து கொண்டிருந்த மூன்று பேரிலே நடுவில் வந்த சுந்தர புருஷரின் முகம் தங்கள் திருமுகம் போலிருந்தது. அது உண்மையா, இல்லையா என்பதைத் தாங்கள்தான் சொல்ல வேண்டும்....''

இளவரசர் மதுராந்தகர், ''போதும்; நிறுத்து!'' என்றார். அவருடைய குரலில் பீதி தொனித்தது.

வந்தியத்தேவன் சும்மா இருந்தான்.

''நீ நிமித்தக்காரனா?''

''இல்லை, ஐயா! அது என் தொழில் இல்லை. ஆனால் நடந்ததையும் சொல்லுவேன்; இனிமேல் நடக்கப் போவதையும் சொல்லுவேன்.''

மதுராந்தகர் சிறிது யோசித்து விட்டு ''குதிரை மேல் நின்ற போது ஏதோ கத்தினாயே, அது என்ன?'' என்று கேட்டார்.

''அபாயம் என்று கத்தினேன்.''

''யாருக்கு அபாயம்?''

''தங்களுக்குத்தான்!''

''என்ன அபாயம்?''

''பல அபாயங்கள் தங்களைச் சூழ்ந்திருக்கின்றன. அது போலவே பெரும் பதவிகளும் காத்திருக்கின்றன. அவற்றைக் குறித்துச் சாவகாசமாகச் சொல்ல வேண்டும். என்னுடைய கத்தியைக் கூடத்தான் தங்கள் வீரர்கள் பிடுங்கிக் கொண்டு விட்டார்களே? தங்களுடன் என்னைக் கோட்டைக்குள் அழைத்துக் கொண்டு போனால்....''

''ஆகட்டும்; என்னுடன் வா! சாவகாசமாகப் பேசிக் கொள்ளலாம்!''

மதுராந்தகத் தேவர் தம்முடன் வந்த வீரர்களின் தலைவனைக் கை காட்டி அருகில் அழைத்தார். வந்தியத்தேவனைச் சுட்டிக் காட்டி அவனை அவர்களுடன் கோட்டைக்குள் அழைத்து வரும்படி கட்டளையிட்டார். அந்தக் கட்டளை அவ்வீரர் தலைவனுக்கு அவ்வளவு உற்சாகம் அளிக்கவில்லை. ஆயினும் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து வந்தியத்தேவனையும் தன்னுடன் அழைத்துச் சென்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் பழையாறைக் கோட்டைக் கதவு திறந்தது.

மதுராந்தகத் தேவரும் அவருடைய பரிவாரங்களும் வந்தியத் தேவனும் கோட்டைக்குள் பிரவேசித்தார்கள்.

(தொடரும்)

---

கீழே இருப்பதைப் படிக்கும்போது ஒன்றும் புரியவில்லை என்றாலும் கவலைப்பட வேண்டாம். கடைசிவரை படிக்கவும்:

மறவாத கோபால், திருச்சி-8.
லில் எழுது. உனக்கு எனது அன்பு. என்றும் உன்னை
கண்டுபிடித்துத் தரக்கூடாதா? அடுத்த மட
நிபுணராலே என்னை மணக்கப் போகும் நீயாவது அதைக்
கண்டுபிடிக்கத் தெரியவில்லை. துப்பறியும்
டும், வழியை மட்டும்
லிக் கண்டுபிடிக்கும் எனக்குக் காதல் நோயை விரட்
வாகவே இருக்கிறது. எதை எதையோ துரு
கும்போதுகூட உன்னைப் பற்றிய நினை
இருந்தது! இப்பொழுதோ சதா தூங்
னையை விட்டு வருவதற்கு முன் ஏதேதோ நினைவாக
சும்மா நமாஷுக்கு இப்படி 'விட்' அடித்தேன்.
கண்ணே கவலையை விடு!
மாக இருக்கிறது. பயப்படாதே!
கொடுத்து விடுவேனோ என்று எனக்கே சந்தேக
தான் குற்றவாளி என்று பிடித்துக்
முகமும் தெரிவதால் எங்கே இறுதியில் உன்னைத்
பொருட்களிலெல்லாம் சதா உன்னுடைய
வேண்டாம். இங்கே நான் துப்பறியும்
நீ இங்கில்லையே என்று எண்ணிவிட
மடல். உனக்கு எனது அளவிலா ஆசிர்வாதங்கள்
உன் அன்புக் காதலன் வரைந்த
என் அன்பே!

கடைசிவரை படித்தாகி விட்டதா? சரி, இனி கீழே இருந்து மேல் நோக்கிப் படியுங்கள்; சகலமும் புரியும். —எம். கௌசல்யா



# ராமாயணம்

## ராஜாஜி

**வ**சிஷ்டர் அப்போது சமாதானப் படுத்தினார். ''ராம! ஜாபாலி நாஸ்திகரல்லர். உன்னை எப்படியாவது அயோத்திக்குத் திரும்பிப் போகச் செய்ய வேண்டும் என்பதும், பரதனுடைய துக்கத்தை அகற்ற வேண்டும் என்பதும், அவருடைய கருத்து. உனக்குரிய ராஜ்யத்தை நீ பெற்றுக்கொண்டு மக்களைப் பரிபாலிக்க வேண்டும் என்கிற பெருநோக்குடன் அவர் அவ்வாறு பேசினார். அவர் மேல் கோபிக்க வேண்டாம். ராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்வது உன் குல தருமம். அதைப் பற்றிச் சந்தேகமில்லை. அது ஒருபுறமிருக்க, மற்றொரு புறம் தந்தையின் ஆணை என்கிற பெரிய விஷயம் இருக்கிறது. இதைப் பெரிதாக நீ கருதுவதும் சரியே. ஆனால் பரிதாப நிலையில் உள்ள தம்பி பரதன், பழிக்கு அஞ்சி உன்னைத் தஞ்சமடைந்திருக்கிறான். அதை எப்படி நீ மறுக்கலாம்? உன் பிராணனைப் போல் அவனிடம் நீ வைத்துள்ள அன்பு எங்கள் அனைவருக்கும் தெரியும். அண்டியவர்களைக் கைவிடுவது உன் சுபாவமல்ல. பரதனுடைய விண்ணப்பத்தை எப்படி நீ மறுக்கலாம்? தஞ்சமடைந்தவர்களைக் கைவிடுவதில்லை என்பதும் உன் விரதம் அல்லவா?''

ராமன் இசைவதாகக் காணவில்லை. அச்சமயம் பரதன் சுமந்திரனைப் பார்த்து, ''அண்ணன் என் பேரில் இரக்கம் கொள்ள மறுக்கிறான். சுமந்திரரே, தர்ப்பை கொண்டு வந்து பரப்புவீர். நான் இங்கே உபவாசம் இருந்து உயிர் விடுவேன்'' என்றான்.

சுமந்திரன் தயங்கி ராமசந்திரனைப் பார்த்தான். பரதன் தானே தர்ப்பைப் புல் எடுத்துப் பரப்பி அதன் மேல் அமர்ந்தான்.

''குழந்தாய், இது தகாது. எழுந்திரு. அயோத்திக்குப் போய் உன் கடமையைச் செய். க்ஷத்திரிய தருமத்துக்கு விரோதமான செயலைச் செய்யாதே!'' என்றான் ராமன்.

பரதன் எழுந்து நின்று, ''அயோத்தி நகரத்து ஜனங்களே! ஏன் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? ராமசந்திரன் உங்களுக்கு வேண்டாமா? ஏன் பேசாமலிருக்கிறீர்கள்?'' என்றான்.

ஜனங்கள், ''ராமசந்திரன் சத்தியம் தவற மாட்டான். பிதுர் வாக்கியம் ஒன்றையே பிடித்து அசையாமல் நிற்கிறான். அவன் குணம் நமக்குத் தெரியும். அவன் அயோத்திக்கு வரமாட்டான். அவனை வற்புறுத்துவதில் என்ன பயன்?'' என்றார்கள்.

''தம்பி, இவர்கள் பேச்சைக் கேள். இவர்கள் நம் இருவருடைய ஹிதத்தையும் விரும்புகிறவர்கள். தரும புத்தி கொண்டவர்கள்'' என்றான்.

பரதன் எழுந்து நின்று ''நான் ஒரு பாவமும் அறியாதவன். மகாராஜாவினுடைய ஆணையை நடத்தியே தீர வேண்டுமென்றால், நான் வனத்தில் ராமனுக்குப் பதிலாக இருப்பேன். எனக்குப் பதிலாக அண்ணன் அயோத்தியையில் ராஜ்ய பரிபாலனம் செய்யட்டும்'' என்றான்.

ராமன் இதைக் கேட்டுச் சிரித்து, ''இந்த 'விநிமய பரிவர்த்தன' முறை இந்த விஷயத்தில் பொருந்துமா? இது கடை வியாபாரம் அல்லவே? ஒருவன் கடமையை மற்றொருவன் ஆபத்துக் காலங்களில் செய்வதுண்டு. செய்ய வேண்டிய விரதத்துக்கு வேண்டிய தேக சக்தி இல்லாத காரணத்தால் செய்யலாம். அண்ணன் இருக்க வேண்டிய நியமத்தைத் தம்பி எடுத்துக் கொள்ளலாம். ஆனால், எப்போது? அண்ணனுக்கு விரதத்தை நிறைவேற்றும் சக்தி யில்லாமலிருந்தால் அப்படிச் செய்யலாம். என் விஷயத்தில் அது பொருந்தாது. வனவாசத்துக்குப் போதிய சக்தி எனக்கு இல்லை என்றும், பரதனுக்கு உண்டு என்றும் நீங்கள் யாராவது சொல்வீர்களா?'' என்று கேட்டான்.

அப்போது வசிஷ்டர் பரதனைப் பார்த்து, ''ராமனுடைய அதிகாரத்தைக் கொண்டு சக்கரவர்த்தித் திருமகனுக்காக நீ ராஜ்ய பரிபாலனம் செய். அப்படிச் செய்வதால் பழியுமில்லை; சத்தியமும் காக்கப்படும்'' என்றார்.

பரதனைத் தன் மடிமேல் உட்கார வைத்து, ராமன், ''தம்பி, நான் தந்த ராஜ்யமாகவே எண்ணி நீ ஒப்புக் கொண்டு தந்தை சொற்படி நட'' என்று தன் அன்பின் சக்தியையெல்லாம் செலுத்திக் கேட்டுக் கொண்டான்.

அந்தச் சமயம் பரதன், ராமன் இருவர் திருமேனிகளும் இரு சூரிய பிம்பங்களைப் போல் ஒளி வீசி விளங்கின.

''அண்ணா, நீயே என் தந்தை, என் தெய்வம். நீ சொல்கிறபடியே செய்

கிறேன். உன் மிதியடியை எனக்குத் தந்தாயானால் உனக்குப் பதிலாக அதை வைத்துக் கொண்டு நான் பதினான்கு ஆண்டுகள் முடியும் வரையில் நகரத்துக்கு வெளியிலிருந்து கொண்டு உனக்காக ராஜ்ய பரிபாலன காரியங்களைச் செய்து, உன் பாதுகைக்கு என் பணியைச் சமர்ப்பிப்பேன். பதினைந்தாவது வருஷம் நீ நகரத்துக்கு வந்து ராஜ்யத்தை ஒப்புக் கொள்வாயாக'' என்று கூறிப் பரதன் முடித்தான்.

''அப்படியே!'' என்றான் சக்கரவர்த்தித் திருமகன். தன் கால்களை அன்புடன் பாதுகையின் மேல் வைத்து எடுத்துப் பரதனிடம் தந்தான். அவனும் வணங்கிப் பெற்றுக் கொண்டு தன் தலைமேல் வைத்துக் கொண்டான்.

பரதனும் பரிவாரமும் அயோத்தியை நோக்கிச் சென்றார்கள். வழியில் பரத்வாஜ முனிவரைக் கண்டு நடந்த விஷயங்களை அவரிடம் சொன்னார்கள். அவரும் பரதனுடைய குணத்தையும் முயற்சியையும் பாராட்டி, ''உன் சீலமும் உன் குணமும் என்றென்றும் விளங்கும். தசரதன் மகன் அல்லவோ நீ? தண்ணீர் எப்படிப் பள்ளத்தை நோக்கி ஓடுகிறதோ அப்படி நெறி தவறாமல் உன் குலத்தின் சீலம் உன்னை அடைந்திருக்கிறது. உன்னைப் பெற்ற தசரதன் பாக்கியவான். அவன் இறக்கவில்லை. உயிருடனே உன் சொருபத்தில் அமரனாக வாழ்கிறான்'' என்று சொல்லி ஆசீர்வதித்தார்.

அவ்விடமிருந்து குகனுடைய இருப்பிடத்துக்குச் சென்று கங்கையைத் தாண்டி அயோத்தியை அடைந்தார்கள். பரதனும் பரிவாரமும் நகரத்துக்குள் நுழைந்தார்கள். தந்தையும் தமையனும் இல்லாத நகரத்தை நெருங்கி வந்ததும், ''சாரதியே, பாழாய்க் கிடக்கிறதே, ஊர்!'' என்றான் பரதன்.

அவன் கண்ணுக்கு நகரம் அமாவாசை இருள் சூழ்ந்து துக்கத்தில் ஆழ்ந்து கிடப்பதாகத் தோன்றியது. முன்பு கேகய தேசத்திலிருந்து வேகமாக வந்து நகரப் பிரவேசம் செய்த பொழுது 'என்ன நடந்ததோ' என்ற திகிலுடன் பிரவேசித்தான். இப்போது எல்லாம் நன்றாகத் தெரிந்த நிலையில் பிரவேசித்தான். ஒவ்வொன்றையும் எண்ணி எண்ணித் துக்கப்பட்டான்.

அரச மாளிகைக்குள் சென்றான். தந்தை இல்லாத சூனியமான அந்த மாளிகையில் தாய்மார்களை இறக்கி விட்டு, விடை பெற்றுக் கொண்டு சபா மண்டபத்தில் வசிஷ்டர் முதலானவர்களுக்குச் சொன்னான்:



''என் துக்கம் மிகப் பெரியது. அதை நந்திக் கிராமத்திலிருந்து சகித்துக் கொண்டு நான் ராமனிடம் வாக்குக் கொடுத்தபடி காரியங்களை அங்கிருந்து கொண்டே பார்ப்பேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்'' என்றான்.

அவ்வாறே செய்யப்பட்டு, சபை கூட்டி, ''இந்த ராஜ்யம் ராமனுடையது. தற்காலிகமாக என்னிடம் ஒப்புவித்திருக்கிறான். அண்ணனுக்குப் பதிலாக அவன் மிதியடியை ஆசனத்தில் அமர்த்தியிருக்கிறேன். அதன் அடிமையாக நான் அரசாங்கம் நடத்தி வருகிறேன்'' என்று பரதன் ராஜ சபையில் பிரதிக்ஞை செய்தான்.

அப்படியே ராஜ்யபாரத்தை மந்திரிகளுடைய உதவியைக் கொண்டு நல்ல முறையில் நந்திக் கிராமத்திலிருந்து கொண்டு, ராமனுடைய வனவாசம் முடிந்து, சீதா சமேதமாகச் சக்கரவர்த்தித் திருமகன் திரும்பி வரும்வரையில் ஒரு தவமாகக் கருதி நடத்தி வந்தான்.

தனக்கென்றல்லாமலும், வேறு எவ்விதப் பற்றும் கொள்ளாமலும், பகவானுடைய சரணங்களில் பலனைச் சமர்ப்பித்து, லோகோபகாரத்தை முன்விட்டுக் கடமைகளைச் சரிவரச் செய்வது தவமேயல்லவா? ராமன் காட்டில் தவமிருந்த பதினான்கு வருஷ காலம் பரதன் அயோத்தியையில் நந்திக் கிராமவாசியாகத் தவம் செய்து வந்தான் என்பது பெரியோர்களுடைய விளக்கம்.

* * *

சித்திரகூடப் பிரதேசத்தில் கொடிய ராக்ஷசர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தலைவர் ராவணனுடைய தம்பி கரன். இவனுக்கு ராமன் பேரில் வெகு துவேஷம். இந்தக் காரணத்தால் கரனும் அவனைச் சேர்ந்தவர்களும் சித்திரகூட வனத்துக்குள் அடிக்கடி பிரவேசித்துத் தங்களை இம்சை செய்து வருவதால், ரிஷிகள் அவ்விடத்தை விட்டு வேறு இடத்துக்குப் போக நிச்சயித்திருப்பதாக ராமனிடம் அவர்கள் தெரிவித்தார்கள். ராமன் எவ்வளவு தைரியம் சொல்லியும் அவர்கள் கேட்காமல், அவ்வாறே அந்த இடத்தை விட்டு வேறிடம் போய்விட்டார்கள்.

பரதன் திரும்பிப் போனது முதல் ராமனுக்குச் சித்திரகூடத்தில் மன நிம்மதியில்லை. தாய்மார்களும் தம்பியும், வந்து தன்னைச் சந்தித்துப் பேசியது அவனுக்குச் சதா நினைவிலிருந்து வந்தது. ஸ்மாரக சந்நிதியில் ஆற்றாமை இரட்டிக்கும். அந்த இடத்தை விட்டு வேறிடம் செல்வது நலம் என்று அவனுக்கும் தோன்றிற்று. ரிஷிகள் போய் விட்ட பிறகு ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் சித்திரகூடத்தை விட்டு தண்டகாரண்யத்தில் வேறு இடம் பார்த்துக் கொள்ள நிச்சயித்தார்கள்.

இவ்வாறு தீர்மானித்த பின் ராம லக்ஷ்மணர்கள் சீதையுடன் அத்திரி மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்று அவரை வணங்கித் தங்கள் யோசனையைத் தெரிவித்தார்கள். அத்திரி மகரிஷியின் மனைவி மகா தபஸ்வியான அனசூயை. சீதை அவளை வணங்கி அவளுடைய ஆசியைப் பெற்றாள். ''வனம் சென்ற புருஷனுடன் நீ கஷ்டங்களை அனுபவித்து எல்லோருக்கும் வழிகாட்டி வருகிறாய்'' என்று சீதையை மிகவும் பாராட்டித் தன் அன்புக்கு அடையாளமாக வஸ்திரமும், மங்கள ஆபரணங்களும், மஞ்சள் குங்குமமும் பரிமளப் பொடியும் கொடுத்தாள். அனசூயை மகா பாக்கியவதி. அவள் கொடுத்த வஸ்திராபரணம் சீதைக்கு அழியாத அழகும், ஆன்ம சக்தியும் தந்தன.

அவற்றைச் சீதை பெற்றுக் கொண்டு ''என் கணவர் சக்கரவர்த்தித் திருமகன் என்மேல் பெற்ற தாயின் அன்பையும் தந்தையின் அன்பையும் ஒன்று சேர்த்துச் செலுத்தி வருகிறார். எனக்கு என்ன குறை?'' என்றாள்.

பிறகு, போக வழி கேட்டுக்கொண்டு மூவரும் சென்றார்கள். (தொடரும்)

---

## தாடிக்குக் காரணம்!

சீக்கியருக்குள்ள ஒரு பெரிய அடையாளம் மழிக்கப்படாத முகம் - தாடியும் மீசையும். அதை அவர்கள் ஒழுங்குபடுத்தி ஒரு வலையும் போட்டிருக்கும் கலை ஊன்றிக் கருதற்குரியது. இப்படி மழிக்காத முகத்துடன் இருக்க வேண்டியது அவர்கள் சமயச் சட்டம். சீக்கிய சமயத்தை உண்டு பண்ணியவர் குருநானக். 1469ம் ஆண்டு பிறந்த அவருக்கு 1969ம் ஆண்டில் 500ஆம் ஆண்டுவிழா கொண்டாடுகிறார்கள். இந்தியாவின் வடமேற்கு எல்லையில் உள்ள ஒரு மாநிலத்தில் ஓங்கியுள்ள சமயமே சீக்கியம். அம்மதத்தைச் சேர்ந்த தேசபக்தர் ஒருவர் (சர்தார் உஜ்ஜல் சிங்) தமிழ் மாநிலத்தின் ஆளுநராயிருப்பதும், அவர் ஆளும் மாநிலத்தில் குமரி நாட்டில் குருநானக்கின் 500ஆம் ஆண்டு விழா கொண்டாடப் பெறுவதும் சாலப்பொருத்தமே.



குருநானக் வழிவந்த குருமார்கள் மொத்தம் பத்துப் பேர். அவர்களுள் ஐந்தாவது குரு அர்ஜன். இவரே சீக்கியர்களின் சமய நூலாகிய ஆதி கிரந்தத்தைத் தொகுத்தவர். ஒருமுறை குரு அர்ஜன் ஆதி குருவாகிய குரு நானக்கின் குமாரர் ஸ்ரீ சந் என்பவரைக் காணச் சென்றிருந்தார். அப்போது அவர், 'தாங்கள் இவ்வளவு நீளமாகத் தாடி வளர்ப்பது ஏன்?' என்று கேட்டார். அதற்குக் குரு அர்ஜன் 'தங்கள் பாதங்களில் படியும் தூசியைத் துடைப்பதற்காகத்தான்' என்றாராம். அடக்கத்தின் அவதாரம் அர்ஜன். - ந. சஞ்சீவி

# வாழ்வில் இன்பம் பன்மடங்காகும்

## உமக்கென ஒரு ஜெம் இருந்தால்

வாங்கிக்கொள்ளுங்கள் ஒரு ஜெம்...போகமயமான ஒரு புத்துலகம் உங்களை வரவேற்கும்...கடை கண்ணிக்குப் பல நடைகள் போக வேண்டியிராது...உணவுகள் அதிக நேரம் புதுமையோடு இருக்கும்... திடீர் விருந்தாளிகளைக் கண்டு திடுக்கிட வேண்டியதில்லை...அக்கம் பக்கத்தோரின் மெச்சும் விழிகள் உங்கள் மீது படரும் (பொறாமைக் கண்களும் கூட!) ஆம், உமது இல்லத்திற்கென ஒரு ஜெம் இருந்தால் இன்பம் பன்மடங்காகும். இளமையான எழிலும் இடவசதியும் மிகுந்தது ஜெம். சேவைத்திறனும் சிக்கனமும் மிக்கது. சுருங்கக் கூறின், நல்ல ரெப்ரிஜிரேட்டருக்கு உள்ள எல்லாப் பண்புகளும் அதற்கு உண்டு. மேலும் உண்டு!

எடுப்பான இதர ஜெம் சிறப்புகள்:

▼ ரெப்ரிஜிரேட்டர்-டீப் ஃப்ரீஸர் இரண்டுமிணைந்தது ▼ தானாக இறுக மூடிக்கொள்ளும் புதிய ஆட்டோமேட்டிக் காந்தக் கதவு ▼ குறைந்த மின் செலவு. ▼ சேமிப்புக்கென அதிக அதிக இடப் பரப்பு ▼ ஐஸ், ஐஸ் க்ரீம் இரண்டையும் அதிவிரைவில் உருவாக்கும். ▼ ஓசையற்ற இயக்கம் ▼ உத்தரவாதமாகக் கட்டிறுக்கமாக மூடிய யூனிட்.

286 லிட்டர் மற்றும் 175 லிட்டர் கொள்ளளவுகளிலே கிடைக்கிறது. விலைவிகித ஒப்பந்தப்படி D.G.S.&D.யிடமும் கிடைக்கிறது.






விற்பனைக்கு விடுப்போர்:
**ஜெனரல் எக்விப்மெண்ட் மர்செண்ட்ஸ் லிட்.**
பம்பாய் • கல்கத்தா • சென்னை • அகமதாபாத்
• பெங்களூர் • சண்டிகார் • எர்ணாகுளம்-கொச்சின்
• ஜெய்ப்பூர் • லக்னோ • செகந்தராபாத்
ரிஜி. ஆபீஸ்: N-75 கன்னாட் ஸர்க்கஸ், நியூ டெல்லி-1

AIYARS GEM 33 TM



### டென்னிஸ் கிருஷ்ணனுக்குக் கிரிக்கெட் ஆடத் தெரியுமா?

இந்த விஷயத்தில் நான் எவ்வளவோ தேவலை என்று பெருமைப்படுகிறேன். ஏன் தெரியுமா? சமீபத்தில் சென்னைக்கு ஸ்பெயின் நாட்டின் பிரசித்திபெற்ற டென்னிஸ் ஆட்டக்காரர் சந்தானா வந்திருந்தாரே! அவர் என்னைச்சந்திக்க என் வீட்டுக்கு வந்திருந்தார். அப்போது நான் சுவாரசியமாக டில்லி டெஸ்ட் பந்தயம் பற்றிய காமெண்டரியைக் கேட்டுக் கொண்டிருந்தேன். ''ரேடியோவில் அப்படி என்ன சுவையான நிகழ்ச்சி?'' என்றார் சந்தானா. ''கிரிக்கெட் ரன்னிங் காமெண்டரி'' என்றேன். அவர் உதட்டைப் பிதுக்கினார். அவருக்குக் கிரிக்கெட் ஆட்டத்தைப் பற்றிய நுணுக்கங்கள் ஒன்றுமே தெரியாதாம்! 'பௌலர் என்ன செய்வார், பாட்ஸ்மன் எப்படி விக்கெட்டைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும், அம்பயர் எங்கே நிற்பார்' என்பது பற்றியெல்லாம் எனக்குத் தெரிந்ததை அவருக்குப் பெரிய புரொபசர்போல் விளக்கினேன்.

பொதுவாக ஐரோப்பிய நாடுகளில் கிரிக்கெட்டுக்கு அதிக மகத்துவம் கிடையாது.

# கிரிக்கெட் பற்றி டென்னிஸ் கிருஷ்ணன்

எல்லோரும் என்னை 'டென்னிஸ் கிருஷ்ணன்', 'டென்னிஸ் கிருஷ்ணன்' என்று குறிப்பிடுவதாலே எனக்கு வேறு விளையாட்டுக்களைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று முடிவு கட்டி விட்டீர்களா? சரியாகப் போச்சு! பள்ளிக்கூட நாட்களில் நானும் கிரிக்கெட் ஆடியிருக்கிறேன்! ஆனால் அப்போதே கவனமெல்லாம் டென்னிஸ் ஆட்டத்தின்மீது திரும்ப வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டதால் கிரிக்கெட் ஆட்டத்தில் தொடர்ந்து நேரடியாக ஈடுபாடு கொள்ள முடியவில்லை. அவ்வளவுதான்!

ஆனால் இப்போதும் கிரிக்கெட் ஆட்டத்தின் நேர்முக வர்ணனையை ரேடியோ மூலம் கேட்க எனக்குப் பிடிக்கும். சில சமயங்களில் ஆட்டம் நடக்கும்போது 'கல்லி', 'மிட் ஆன்' 'ஷார்ட்லெக்' என்று ஆட்டக்காரர்கள் நிற்கும் இடங்களைக் குறிப்பிடுகிறார்கள். இந்த இட விவரங்கள் மாத்திரம் சட்டென்று என் மனத்தில் பதியாது. இனி இதை நன்கு தெரிந்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். இந்தத் தடவை சென்னையில் நடக்கும் ஆஸ்திரேலியா – பாரத டெஸ்ட் பந்தயத்துக்குப் போகும் போது விவரம் அறிந்த என் உறவுக்காரர் ஒருவரையும் அழைத்துப் போகத் திட்டமிட்டிருக்கிறேன்.

நான் இங்கிலாந்துக்கு டென்னிஸ் பந்தயங்களில் கலந்து கொள்ளப் போகும்போது சில சந்தர்ப்பங்களில் அங்கே கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்கள் நடப்பதுண்டு. ஆனால் மைதானத்துக்குப்போய் ஆட்டம் பார்த்ததில்லை. டென்னிஸ் கிளப்பில் உள்ள டெலிவிஷன் மூலமே பார்த்து ரசிப்பேன்.

அமெரிக்க நாட்டில் கிரிக்கெட் வாசனை மருந்துக்குக்கூடக் கிடையாது. எல்லாம் 'பேஸ்' பால்தான். ஆனால் பிலடெல்பியா நகரில் மெரியன் கிரிக்கெட் கிளப் இருக்கிறது. பாஸ்டன் நகரில் லாங்வுட் கிரிக்கெட் கிளப் இருக்கிறது. இந்த இரண்டு ஊர்களுக்கும் நான் போயிருக்கிறேன். அமெரிக்காவில் உள்ள இந்த இரண்டு ஊர்களில் மாத்திரம் கிரிக்கெட் ஆடுகிறார்கள் என்று நீங்கள் நினைத்தால் நிச்சயம் ஏமாந்து போவீர்கள்! டென்னிஸ் ஆட்டம் நடக்கும் இடங்களுக்கு இங்கே கிரிக்கெட் கிளப் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அவ்வளவுதான்.

பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர்களான இஞ்சினியர், போர்டே, முதலியார்களிடம் எனக்கு நிறையப் பரிச்சயம் உண்டு. சமீப காலமாகப் பிரகாசிக்கும் இளைஞர்களை எனக்குத் தெரியாது.

என் மனைவிகூட ஒரு கிரிக்கெட் ரசிகை!

# டென்னிஸ் பற்றி கிரிக்கெட் கோபாலன்

**எம்.** ஜே. கோபாலன் என்ற பெயரைக் கேட்டவுடன் உங்களுக்குக் கிரிக்கெட் ஆட்ட நினைவுதான் வரும். இது சகஜம். ஆனால் எம்.ஜே. கோபாலனாகிய அடியேன் கிரிக்கெட் வழிபாட்டில் தீவிர பக்தனாக மாறுவதற்கு முன் டென்னிஸ் உபாசகனாகவும் இருந்திருக்கிறேன் என்று என்னுடன் நெருங்கிப் பழகிய சிலருக்குத்தான் தெரியும். என்னுடைய டென்னிஸ் உபாசனை அந்தநாளைய 'பிங்பாங்' ஆட்டத்தில் தொடங்கியது.

நான் திருவல்லிக்கேணியில் உள்ள கெல்லட் ஹைஸ்கூல் மாணவன். பள்ளி நாட்களிலேயே எனக்கு பிங்பாங் ஆட்டத்தில் ஒருவிதக் கவர்ச்சி ஏற்பட்டது. கே. எஸ். ரங்கா ராவ் என்ற நண்பர் அளித்த உற்சாகத்தில் அருகில் இருந்த விளையாட்டுக் கிளப்பில் நானாகவே போய் விளையாடத் தொடங்கினேன். அந்த நாட்களில் பிரசித்தி பெற்ற பிங்பாங் ஆட்டக்காரர்களான வி. ஜகந்நாதன், எம். ஆர். கிருஷ்ணசாமி, வெங்கடபதி முதலியோர் அங்கே விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆட்டத்தைப் பார்த்துப் பார்த்து நானாகவே என் ஆட்டத்துக்கு மெருகு ஏற்றிக் கொண்டேன். யாரிடமும் முறையாகப் பயிலவில்லை. மற்ற கிளப்புகளுடன் நடந்த போட்டிப் பந்தயங்களிலும் கலந்து கொள்ளத் தொடங்கினேன்.

இந்த ஆட்டத்தில் புறங்கைப் பக்கமாக இடப்பக்க அடி (Back hand Shot) யில் நான் தேர்ந்தவனானேன். வலப்பக்க நேர் அடி கொஞ்சம் சுமார்தான். இதைக் கவனித்த சில நண்பர்கள் "கோபாலா! உனக்கு டென்னிஸ் ஆட்டம் நன்றாக வரும்" என்றார்கள். இதைக் கேட்டதும் எம். யு. சி. கிளப்பில் டென்னிஸ் ஆடிப் பழகவும் தீர்மானித்தேன்.

அந்தக் கிளப் 'மார்க்கர்' தங்கமான ஆசாமி. எனக்கு இரவலாக ஒரு 'பாட்' சம்பாதித்துக் கொடுத்ததோடு நிற்காமல், என்னுடன் அடிக்கடி ஆடி எனக்கு நல்ல பயிற்சியைக் கொடுத்தார். டென்னிஸ் ஆட்டத்துக்குக் கூர்மையான கவனிப்புத் தேவை. பந்து பாய்ந்துவருவதைக் கவனிக்கவேண்டும். அதே கணத்தில் எதிராளி ஏற்க முடியாத இடத்துக்குப் பந்தைத் திருப்பி அனுப்பவும் வேண்டும். இந்தக் கூர்மையான கவனிப்புப் பிரச்னை, கிரிக்கெட் ஆட்டத்துக்கும் ஆதாரமானது. ஆகையால் டென்னிஸ் ஆட்டம் தான் என் கிரிக்கெட் வாழ்க்கைக்கும் அடிகோலியது. இடையே நான் ஹாக்கி விளையாட்டிலும் புகுந்தேன்.

ஒரு நாள் முன் இரவு நேரத்தில் ஒரு கிளப்பில் 'பிங்பாங்' ஆட்டப் போட்டி. நான் ஆடவேண்டும். அன்று மாலையில் கலந்து கொள்ள வேண்டிய ஹாக்கிப் போட்டிப் பந்தயமும் இருந்தது. ஹாக்கி ஆட்டத்தில் கலந்து கொண்டு விட்டு பிங்பாங் ஆட வந்தபோது, என்னால் போதிய கவனம் செலுத்த இயலவில்லை. ஆகையால் அன்றே ஒரு முடிவுக்கு வந்து இனிமேல் ஹாக்கி, கிரிக்கெட்டுக்காகப் பிங்பாங் ஆட்டத்தைத் தியாகம் செய்து விடுவதென்று தீர்மானித்து விட்டேன்.

பிங்பாங், டென்னிஸ் ஆட்டங்களில் நான் பிரபல விளையாட்டுக்காரர்களுடன் பந்தயங்களில் கலந்து கொள்ளவில்லை என்றாலும், நான் கலந்து கொண்ட சில பந்தயங்களில் வெற்றிக் கோப்பைகள் பெற்றிருக்கிறேன்.

இப்போதும் நல்ல டென்னிஸ் பந்தயங்கள் பார்ப்பதில் எனக்கு உற்சாகம் அதிகம். வேகம் நிறைந்த ஆட்டம் அது. கூர்ந்த கவனமும், உடல் கட்டுப்பாடும் தேவை. பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தும் விளையாட்டு அது.

பேட்டி: **கோமதி சுவாமிநாதன்**

எம். ஜே. கோபாலன்
டென்னிஸ்
ஆடுவாரா ?



# மணிபுரத்து மணி நடனங்கள்



பரத நாட்டியக் கலை எவ்வளவு பழைமையானதோ அவ்வளவு புராதனமானது மணிப்புரி நடனக் கலை. அவ்வளவு சாஸ்திரீயமானது ; புனிதமானது ; நுட்பங்கள் கொண்டது. மணிப்புரி நடனங்களை புரிந்து கொண்டு அநுபவிக்க வேண்டுமானால், ''இந்திய நடனங்களில் மணிப்புரி நடனங்களும் உண்டு. மாதிரிக்கு இதோ ஒன்று'' என்ற ரீதியில் நாம் சாதாரணமாகக் காண்கிறோமே, அப்படிக் கண்டால் போதாது. முழுக்க முழுக்க மணிபுரி நடனங்களாகவே பார்க்க வேண்டும். அத்தகைய முழு மணிப்புரி நடனங்களைச் சென்னை ரசிகர்களுக்குக் கலாக்ஷேத்ர அரங்கில், கலாக்ஷேத்ர சூழ்நிலையில் அற்புதமாக விளக்கி வைத்தார், குஜராத்தி சீமாட்டி குமாரி ஸவிதா பென் மேத்தா. ஆமாம், விளக்கி வைத்தார் ! அழகான சொற்பொழிவு ஆற்றி, ஒவ்வொரு மணிப்புரி நடன வகைக்கும் அபிநயம், முத்திரைகள் பிடித்து ஆடிக் காட்டி விளக்கி வைத்தார். இந்த 'டெமான்ஸ்ட்ரேஷன்' பேச்சே முழு நடன நிகழ்ச்சி போல இருந்தது. பிறகு அவற்றை ஆடியும் காண்பித்தார். அழகாக, வியக்கும் வகையில் ஆடினார். சுத்த மத்தளத்தை இடுப்பில் கட்டிக் கொண்டு, நமது சம்பிரதாயத்தில் நட்டுவனார் வழங்கும் சொல்லுக் கட்டுக்களை மிருதங்கத்திலேயே வாசித்துக் கொண்டு ஆடப்படும் வகை, ஆண்களே ஆடக்கூடிய தாண்டவ வகை நடனம் முதலியவற்றை குமாரி ஸவிதாபென் ஆடிக் காட்டினார்.

சின்னஞ் சிறு கஞ்சிரா இரண்டை இரு கைகளிலும் ஏந்தி, ஜாலர் தட்டுவது போல், உடம்பிலும், கையிலும், தரையிலும் துரித காலத்திலும் நடை பேதத்திலும் கோவை தவறாது தட்டி ஆடப்பட்ட நடனம் ஒரு வகை.

ஜாலராக்களை மட்டும் கையில் ஏந்தி, நமது பஜனை சம்பிரதாயத்தில் உள்ளதைப் போல், ஆனால் பல நுட்பங்களைக் கொண்ட முறையில், அவற்றை ''ராதா கிருஷ்ணா, ராதாகிருஷ்ணா'' என்ற மந்திர ஒலி ஒலிக்கச் செய்து ஆடப்பட்ட ஒரு வகை நடனம் மெய்சிலிர்க்கச் செய்கிறது.

நாயிகா பேதங்களைச் சித்திரித்து ஆடிக் காட்டியது முதல்தரமான நிகழ்ச்சி. ஆடிய இரண்டு மணி நேரத்துக்கு ரசிகர்களை மணிபுரத்து கோவிந்த்ஜி ஆலயத்துக்கே கூட்டிச் சென்றுவிட்டார் குமாரி ஸவிதா!

குமாரி ஸவிதா பென் மணிப்புரி நடனங்களைத் தவிர, பரத நாட்டியமும், கதக் நடனங்களும் முறைப்படி அததற்குரிய ஆசான்களிடம் கடுமையாக உழைத்துக் கற்றறிந்தவர். எனினும், மணிப்புரி நடனங்களில் தமது மனத்தை முற்றிலும் பறி கொடுத்து விட்டார். இக்கலையின் புராதன சம்பிரதாயங்கள் மறைந்து அழிந்து போய் விடுமோ என்று இக்கலையைப் பற்றி ஒரு பெரிய புத்தகத்தை எழுதிக் கொண்டு வருகிறார். இக்கலைக்குப் புத்துயிர் அளித்து கீழ்க் கோடியில் செழிக்கும் இக்கலையை மேற்குக் கோடியில் தமது பரிமள கலாநிலயத்தின் மூலம் நிலைநாட்டி அதன் நறுமணம் நாடெங்கிலும் வீசச் செய்து வருகிறார். அவர் முயற்சியைப் பாராட்டுகிறோம்.

குமாரி ஸவிதாபென் மணிப்புரி நடனத்துக்கு ஆற்றும் பணியைப் பரத நாட்டியத்துக்கு ஸ்ரீமதி ருக்மிணி தேவி ஆற்றும் பணிக்கு ஒப்பிடலாம்.

— எம். எஸ். செல்வஸாமி





# சிலையைத் தேடி... 14

தந்தையை அந்த நிலையில் கண்ட நீலாவுக்குத் துக்கம் தாங்கமுடியவில்லை. மகிழ்ச்சி ஒரு பக்கம் வேதனை மறு பக்கம்....

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..

உங்களை இப்படி இங்கு பார்ப்பேன் என்று நான் நினைக்கவில்லை அப்பா. இந்தத் தண்ணீரைக் குடியுங்கள். வலி தெரியாதிருக்க இதோ மாத்திரை... அப்பா, இங்கு எப்படி வந்தீர்கள்?

கண்ணே நீலா, நீ சந்தித்த இந்திரபால் என்னிடம் வந்தார். இந்திரபாலுடன் எனக்குள்ள தொடர்பு கம்யூனிஸ்ட்களுக்குத் தெரிந்து விட்டது. இந்திரபால்— இறந்து விட்டார். நான் அவர்களின் வேட்டைப் பொருளானேன். அவர்களிடமிருந்து தப்பத் தலைமறைவாகி ஓடி வந்தேன்.......

அழாதிருங்கள் அப்பா. இந்தக் கயிற்றை உத்திரத்தோடு பிணைக்கிறேன். ரவி கூட என்னோடுதான் இருக்கிறான்.

இனி நாம் இந்த நாட்டில் பத்திரமாக இருக்க முடியாதம்மா. நாம் தாய் நாடு திரும்ப 'சுங்சிங்' உதவுவார் என்று இந்திரபால் இறக்கும் போது கூறினார். அதனால்தான் இங்கு வந்தேன் உங்களைத் தேடி...

நீலாவின் தந்தை கோபாலன் மூர்ச்சையடைகிறார். திட்டமிட்டபடி கயிற்றின் மறுமுனை வெளியில் இருப்பவர்களுக்குக் கிடைக்கிறது.........

சீக்கிரம்... சீக்கிரம் அதை இழுத்து என் அப்பாவைக் காப்பாற்றுங்கள்..

மிஸ்டர் சுங்சிங்! அவர் என் அப்பா. பிழைத்துக் கொள்ளுவாரில்லையா?

எனக்கு எல்லாம் தெரியும் குழந்தாய். உன் தகப்பனார் எங்கள் நண்பர். அவரை மீட்கத் திட்டமிட்டிருந்த போது உன் தோழர்கள் எல்லாத் தகவல்களையும் கூறிவிட்டார்கள்...

நீலா, ரவி! உங்கள் தைரியத்தையும் துணிவையும் எத்தனை பாராட்டினாலும் தகும். ஆனால் உங்கள் திறமைக்கும் வீரத்துக்கும் இனி மேல்தான் வேலை இருக்கிறது.

# நாய்களின் ராஜா!



*('ஸர்பிலானினக்!' அப்படியென்றால்? ''ஜெகன் அலக்ஸிரஞ்சன்!'' என்று அந்தக் காலச் சினிமாவில் தோன்றிடுவார்களே அது போன்றதா? அதெல்லாம் ஒன்றுமில்லை, ஒரு நாயின் பெயர்தான்!)*

அகன்ற மார்பு, அழகிய கண்கள், உறுதியான பற்கள், வனப்புமிகு மேனி, இணையற்ற திரம்; ஈடில்லா யஜமான விசுவாசம்; எழுபத்தைந்து சென்டிமீட்டர் உயரம், நாற்பத்தைந்து கி.கிராம் எடை — 'ஸர்பிலானினக்' என்ற யூகோஸ்லாவிய நாயின் வருணனை இது. நாய்களுள் ராஜா எனக் கருதப்படும் இவ்வினம், கடந்த உலகப் போருக்குப் பிறகு முற்றும் அழிந்துவிடும் நிலையில் இருந்தது. இன்று எல்லைக் காவலுக்குப் பெரிதும் பயன்படும் இந்த இன நாய்கள் யூகோ மலைப் பிராந்தியங்களிலேயே பெரும்பாலும் அலைந்து திரிந்தன. 1938ம் ஆண்டு வாக்கில் சுமார் 250 நாய்களே இருந்தனவாம். இவற்றின் சேவைத் திறனை உணர்ந்த சிலர் இவ்வினத்தைப் பேணி வளர்க்கத் தலைப்பட்டனர். நாளடைவில், இவற்றுக்கு அரசாங்க ஆதரவும் அந்தஸ்தும் கிடைத்தன.

இந்த நாய்களின் அபூர்வமான இயல்பு என்னவெனில், இவை ஒரு தடவை ஏமாந்துவிட்டால் மறுமுறை இவற்றை ஏமாற்றவே முடியாது. யூகோஸ்லாவிய மலைப் பிராந்தியங்களில் வாழும் ஓர் ஆட்டிடையர் கூறுகிறார்: ''என்னிடம் சில ஸர்பிலானினக் நாய்கள் இருந்தன. அவைகளுடன் எனக்கு உள்ள நீண்ட அநுபவத்தின் வாயிலாக அவைகளின் யஜமான விசுவாசத்தில் எனக்கு அபரிமிதமான நம்பிக்கை. சின்னக் குட்டியாக இருந்த போதிலும் அதனைப் பூரணமாக நம்பலாம். ஒரு நாள் இரவில் ஆட்டு மந்தை இருக்குமிடத்தில் ஒரு பெண் ஓநாய் தலை காட்டியது. அது என்ன செய்யப் போகிறது என்பதை என்னால் ஊகிக்க முடிந்தது. ஆனால் என் நாய்களால் ஊகிக்க முடியவில்லை. எல்லா நாய்களுமாகச் சேர்ந்து அந்த ஓநாயைத் தாக்கத் தொடங்கின. ஆடுகள் மூலைக் கொன்றுகப் பயந்து ஓடின. மலைச் சரிவில் காத்திருந்த ஓநாய்களிடம் அவை சிக்கிக் கொண்டன. இதை எதிர்பார்த்துத்தான் மற்ற ஓநாய்கள் மலைச் சரிவில் பதுங்கியிருந்தன! பல நல்ல ஆடுகளை நான் இழக்க நேர்ந்தது. இதில் வேடிக்கை என்னவென்றால் முதலில் ஆட்டு மந்தைக்குள் நுழைந்த பெண் ஓநாய் தன்னைத் தாக்கிய நாய்களைத் திருப்பித் தாக்கவேயில்லை! தன் இனம், ஆடுகளைத் தாக்கி அழித்து விட்டது என்று உணர்ந்ததும் அது நழுவிவிட்டது! மறுமுறை என் நாய்கள் முன் போல் ஓநாய்களிடம் ஏமாந்துவிடவில்லை. முதல் ஓநாய் தலை காட்டியதும், அதனை ஒரு நாய் கவனித்துக் கொண்டது. மற்ற நாய்கள், ஆட்டு மந்தை சிதறி ஓடி ஓநாய்களிடம் சிக்கி விடாமல் சுற்றி வளைத்துத் தடுத்து விட்டன! மனிதர்களைப் போலவே அவை புத்திசாலிகள். மனிதர்களைவிடத் திறம் மிக்கவை.''



நாய்களுள் ராஜா என இதனைக் கூறுதல் மிகப் பொருத்தமே. பிற நாய்களிடம் இல்லாத மற்றொரு விசேஷ குணமும் ஸர்பிலானினக் நாய்க்கு உண்டு. ஜெர்மன் வேட்டை நாய்கள் எதிரியைத் தாக்கும் போது குரைக்கும். எதிரிக்கு இலேசான காயங்களை மட்டுமே உண்டாக்கும். ஆனால் ஸர்பிலானினக் எதிரியை ஒரேயடியாகத் தாக்கி ஒழித்துக் கட்டிவிடும்; அல்லது போராட்டத்தில் தன் உயிரையே இழக்கும்.

ஓர் உதாரணம் பாருங்கள்: மிர்குட் என்ற பெயர் கொண்ட ஒரு நாய் ஆட்டுக் குட்டியைக் காக்க மூன்று ஓநாய்களுடன் போரிட்டு அவற்றில் இரண்டைக் கொன்று விட்டது. மூன்றாவது ஓநாயையும் மரணப் பிடியில் கவ்வி அந்தப் போராட்டத்தில் தானும் உயிரை விட்டது.

தன் யஜமானனைத் தவிர மற்ற யாவரையுமே எதிரியாகக் கருதும் இந்தத் திறமிக்க நாய்களுக்கு, பிறநாடுகளில் கிராக்கி அதிகமாக ஏற்பட்டு வருகிறது. தொடர்ந்து பல நாட்கள் வரை இவை ஆகாரம் ஏதுமின்றியே கூட யஜமானனுக்குச் சேவை புரியுமாம்.

('யூகோஸ்லாவ் ரெவ்யூ' என்ற பத்திரிகையிலிருந்து தமிழில்: 'பாணன்')

# இது டிரான்ஸிஸ்டர் யுகம்!

ம. இராஜாராம்



சின்னப்பா சொன்னார்:

"அப்பல்லாம் ஒரே காடாக் கெடந்த எடமுங்க இது. ஆள் ஆள் பார்க்க முடியாம மறைக்கிற செடி கொடிங்க. ஒரே ஒரு ரோடு தான் நகரத்திலிருந்து. காத்தால ஒரு பஸ், சாயங்காலம் ஒரு பஸ். அவ்வளவுதான். வேற காரு கீரு ஒண்ணும் கெடயாது. இப்ப மெயின் கேட் இருக்கிற எடத்துக்கு அப்பால ஒரு பெரிய பாறை. அது மேல வெயில் படாம பெரிய மரமும் புதரும் மறைச்சிருக்கும். சாப்பிட்டுட்டு அதும் மேல படுத்துத் தூங்கிருவேன்.

"சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஃபாக்டரி, நல்லதுன்னுங்க. அதுனாலே நான் வேலையில் சேர்ந்தேன். அப்போ ஆபீசுக்கு ஒரு கட்டடம் கூடக் கெடையாது. வாடகைக்கு ஒரு 'ரூம்'. அவ்வளவுதான். டெய்லி தபால் எடுத்துக்கிட்டு வாரதுதான் என் வேலை. ஒரு நாள் சூப்பிரண்டு கிட்டவே கேட்டேன்: எங்கயோ ஃபாக்டரி, ஃபாக்டரின்றீங்களே, எங்க ஒண்ணையும் காணுமேன்னு! அவர் சிரிச்சுட்டார். திடும்னு ஒரு நாள் பெரிய பெரிய புல்டோஸருங்க நெறைய வேலை செய்தது. சுமார் இருநூறு பேரு காட்டைத் தரை மட்டமாக்கி லெவல் பண்ணினாங்க. காத்தால வெள்ளையாப் போனவங்க சாயங்காலம் செவப்பாத் திரும்பி வந்தாங்க...... செம்மண்ணு!

"இன்னைக்கு இங்கே பெரிய பெரிய கட்டடங்களும், பிரம்மாண்டமான இயந்திரங்களும், இயந்திரமாகிப் போன மனுசங்களும் நிக்கிறாங்க. இன்னைக்குப் பெரிய பதவிகள்ள இருக்கிற இஞ்சினியர்களெல்லாம் சின்னப் புள்ளைங்களா இன்டர்வியூவுக்கு வந்தது நெனைவிருக்கு. அவங்களெல்லாம் மாறியிருக்கிறாப்பல பாக்டரியும் மாறியிருக்கு"

பாரத் எலக்ட்ரானிக்ஸ் தொழிற்சாலையின் முதல் தொழிலாளி திரு சின்னப்பா. 1954ஆம் ஆண்டிலிருந்து இன்று வரை அவர் தொழிற்சாலையின் வளர்ச்சியைப் படிப்படியாக விவரிக்கும் போது உடல் சிலிர்க்கிறது. அவரைப் போன்ற எத்தனை தொழிலாளர்களின் சலியாத திறமை மிக்க உழைப்பும் தியாகமும் இந்தத் தொழிற்சாலையை இப்போதைய நிலைமைக்குக் கொண்டு வந்திருக்கின்றன என்பதை எண்ணிப் பார்க்கையில் மனம் கரைகிறது.

பதினைந்து வருடங்கள் முன்பு வரையிலும் எலெக்ட்ரானிக்ஸ் என்னும் போது ரேடியோவுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கப் பட்டு வந்தது. ஆனால் எலக்ட்ரானிக்ஸ் என்னும் விஞ்ஞானம் மிகப் பரந்தது. செய்திகள் பரிமாற்றம், வேளாண்மை, நாட்டுப் பாதுகாப்பு, தொழில் வளம், உபகரண உற்பத்தி, ஆராய்ச்சி—இன்னும் எத்தனையோ துறைகளைத் தன்னுள்ளே அடக்கியது என்பதை நினைவில் கொண்டு அதை முழுமைப் படுத்த இந்திய அரசாங்கம் தீர்மானித்த போது பி. இ. எல். எனச் சுருக்கமாக அழைக்கப் பெறும் 'பாரத் எலெக்ட்ரானிக்ஸ் லிமிடெட்' பிறந்தது. ஃப்ரான்ஸைச் சேர்ந்த ஆற்றல் மிக்க ஒரு நிறுவனத்தார் ஆலோசகர்களாக நியமிக்கப்பட்டனர்.

இரண்டே இரண்டு தயாரிப்புகளுடன் இந்நிறுவனம் செயல்பட ஆரம்பித்தது. அவை: ஜெனரல் பர்ப்பஸ் கம்யூனிகேஷன் ரிஸீவர், மீடியம் பவர் 400 வாட் டிரான்ஸ்மிட்டர். இன்றையத் தயாரிப்புகளின் எண்ணிக்கை எழுபதுக்கும் மேல்.

பி. இ. எல்.லில் தயாராகும் எலெக்ட்ரானிக் சாதனங்கள் எந்தெந்தத் துறைகளில் பயன்படுகின்றன பாருங்கள்:

ரயில்வே, அயல்நாடுகளுடன் ரேடியோ—டெலிபோன் தொடர்புகள், வானொலி, விமானப் போக்குவரத்து, மழை ஆராய்ச்சி,



இந்தப் பக்கம்: மானேஜிங் டைரக்டர், ஏ. வி. ஐயப்பா கீழே: பி. இ. எல். தொழிற்சாலையின் முன்புறத் தோற்றம். எதிர் பக்கம்: மேலே, ஒரு டிரான்ஸிஸ்டர் எத்தனை சிறியது என்பதைத் தெளிவாக்கும் இந்தப் புகைப் படத்தை எடுத்தவர் திரு சுப்பிரமணியம். கீழே தொழிற்சாலையின் ஒரு பகுதி.



போலீஸ், தீயணைப்புப் படை, துறைமுகம், பொதுமராமத்து, சுரங்கம், மின்சாரத் துறை, பெட்ரோலியம் துறை முதலியன. தவிர, காது கேட்கும் கருவி, மெகாஃபோன், மீன் தேடி, காதுச் சிகிச்சையில் பயன்படும் ஆடியோ மீட்டர் போன்ற பற்பல வகையான கருவிகளும் இங்கு தயாரிக்கப் படுகின்றன.

மற்ற முன்னேற்றமடைந்த நாடுகளுடன் ஒப்பிடுகையில், எலெக்ட்ரானிக்ஸ் துறையில் நாம் சுமார் பதினைந்து வருடங்கள் பின்தங்கியிருக்கிறோம் என்று கருதப்படுகிறது. இதை மனத்தில் கொண்டு, இந்த இடைவெளியைக் குறைக்கும் முயற்சியாகவே பெரும்பாலான தயாரிப்புக்களை முதலில் பிற நாட்டு நிறுவனங்களின் ஒப்பந்தத்தோடு உற்பத்தி செய்ய ஆரம்பித்தனர்.

பி. இ. எல்.லின் முக்கியமான ஐந்து பகுதிகளாவன: 1. திட்டப் பிரிவு, ஆராய்ச்சி விஸ்தரிப்பு; 2. ரேடியோ எக்விப்மெண்ட்; 3. ரேடார்; 4. காம்பொனென்ட் (வால்வுகள், ட்ரான்ஸிஸ்டர், கிறிஸ்டல் முதலியன); 5. வியாபாரம். இவற்றில் ரேடார் பிரிவுக்குள் சாதாரணமாகப் பார்வையாளர் யாரையும் அனுமதிப்பதில்லை.

உற்பத்திக்கான தயாரிப்பைத் தேர்ந்தெடுத்தபின் அதனுடைய முன் மாதிரி ஒன்றைச் செய்து, மிகவும் கடுமையான சோதனைகளுக்குட் படுத்தித் திருப்தியுற்ற பின்னரே உற்பத்தி தொடங்குகிறது. முதலில் நுணுக்கமான ஆயுதங்கள், படிவங்கள், பொருத்தும் மேடைகள் முதலியன செய்யப்படுகின்றன. ஒரே மாதிரியான சிறு பகுதிகளை நிறைய அளவில் சுலபமாகச் செய்வதற்கான பிரத்தியேகமான அச்சுக்கள் செய்யப்படுகின்றன. இயந்திர சாலையில் சிறு பகுதிகள் தயாரிக்கப்படுகின்றன. தகடுகளை அறுத்து, விதம் விதமாக மடித்து, இணைத்து, வேண்டிய இடங்களில் துளைகள் செய்து, எலெக்ட்ரானிக்ஸ் உபகரணங்களுக்கான பெட்டிகள், கூடுகள் முதலியனவற்றைச் செய்யப் பிரத்தியேகமான உலோகத் தகடுசாலை ஒன்று இருக்கிறது. இவற்றுக்குப் பூச்சுக்கள் செய்யப்படும் இடம் பலவித இரசாயனப் பொருட்களின் மணம் நிரம்பி இருக்கிறது. வர்ணமடிக்கும் சாலையும் தனியாக இருக்கிறது.

இணைப்புப் பகுதியில் மிகவும் கவனம், பொறுமை, துரிதம் நிரம்பிய சுறுசுறுப்பான விரல்கள் ஆகியவை தேவை. அதனால்தான் இங்கே வேலை செய்வோரில் பெரும்பாலோர் பெண்களாக இருக்கிறார்களாம்.

தரத்தின் உயர்வைப் பேணுவதற்காக உபபொருட்களைத் தேர்ந்தெடுத்தல், இணைத்தல் முதலிய ஒவ்வொரு படியிலும் சிரத்தை மிக்க கவனிப்புக் கொடுக்கப்படுகிறது. இவ்வேலை எவ்வளவு கடினமானது என்பதைப் பின்வரும் ஓர் உதாரணத்தின் மூலம் ஊகிக்கலாம். ஒரு கிலோவாட் எஸ்.எஸ்.பி. ட்ரான்ஸ்மிட்டர் போன்ற சில உபகரணங்களில் சுமார் 900 உபபொருட்கள் 5300 இணைப்புக்கள்; 2500 பற்ற வைத்த இணைப்புக்கள், 200 சிறு பகுதிகள் முதலியன உள. இவற்றைச் சோதிப்பதற்காக மிகவும் கவனமாகப் பேணப்பட்ட சோதனைக் கருவிகள் உபயோகிக்கப்படுகின்றன. இவற்றில் சில கருவிகள் இங்கேயே தயாரிக்கப்பட்டவை.

இங்கு தயாராகும் எலெக்ட்ரானிக்ஸ் உபகரணங்கள் உலகத்தில் எந்தப் பகுதிக்குக் கொண்டு போகப்பட்டாலும்—குளிர்ப் பிரதேசம், பாலைவனம், உப்புக் காற்று வீசும் கடல் ஓரப் பகுதி, அழுத்தம் மிக்க மலைப்பிரதேசம் எங்கேயாயினும் — சரியாக இயங்க வேண்டும் என்பதற்காகச் சில சோதனைகள் நடத்த, செயற்கையாகச் சூழ்நிலைகள் உருவாக்கப்படுகின்றன.

பாரத் எலெக்ட்ரானிக்ஸ் நிறுவனத்தின் ஆராய்ச்சி, விஸ்தரிப்புப் பகுதியானது, வானிலை ஆராய்ச்சி ட்ரான்ஸ்மிட்டர், இருதயத் துடிப்பைப் பரிசோதிக்கும் எலெக்ட்ரோ கார்டியோ கிராஃப் போன்ற நுணுக்கமான பல உபகரணங்களுக்குப் புது முறைகள் வகுத்து, முன்னேற்றம் கண்டிருக்கிறது. இதைத் தவிர இதன் முக்கியமான வேலை எந்தெந்த உபகரணங்களில் சுதேசிப் பொருட்களைப் பயன்





## சின்ன வயதில் ரிச்சர்ட் பர்ட்டன்

ஹாலிவுட் நடிகரும், பிரபல நடிகை எலிஸபெத்டெய்லரின் கணவருமான ரிச்சர்ட் பர்ட்டன் சின்ன வயதில் தினசரி பேப்பர் விற்றுக் கொண்டிருந்தார்.

'ஸவுத் வேல்ஸ்' நகரத்தில் தினசரி இவர் பேப்பர் விற்பதற்காக வாரம் 1 ரூபாய் கூலி தருவார்கள். ஆனால், ரிச்சர்ட் பர்ட்டனோ, தாம் வாடிக்கையாக பேப்பர் விற்கும் நபர்களிடத்தில் பேப்பரை படித்த பின்னர் வீசி எறிந்துவிடாமல், தமக்குத் தரச் சொல்லி தயவுடன் கேட்டுக் கொள்வார். பழைய பேப்பர்கள் நிறையச் சேர்ந்த பின்னர் எடைக்கணக்கில் விற்று விடுவார். இப்படித் தம் சாமர்த்தியத்தால் நிறையச் சம்பாதிக்க முயன்றார்.

அன்று வாரம் 1 ரூபாய் கூலிக்குப் பேப்பர் விற்ற ரிச்சர்ட் பர்ட்டன், இன்று ஒரு படத்தில் நடிக்க 6 மில்லியன் டாலர்கள் கேட்கிறார்.

—''பன்னீர்''

படுத்தலாம் என்று ஆராய்வது. இதன் மூலம் அந்நியச் செலாவணியைக் கூடிய வரை மிச்சம் பிடிப்பதுவே நோக்கம்.

தொழிற்சாலையும் குடியிருப்பும் சேர்ந்து சுமார் 705 ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்திருக்கும் பி. இ. எல். தொழிற்சாலையில் சுமார் 9000 தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். இவர்களில் சுமார் 1600 பேர் பெண்கள். பத்துப் பெண்மணிகள் உயர் பதவிகள் வகிக்கின்றனர். ஒரு பெண் பொது நல அதிகாரியும் இருக்கிறார். தொழிலாளர்களுக்கிடையே சொந்த சகோதர, சகோதரிகளும், தந்தையும் மக்களும், தம்பதிகளும் இருக்கிறார்கள். தம்பதிகளில் சிலர் காதல் மணம் புரிந்து கொண்டவர்கள். எலெக்ட்ரானிக்ஸ் இணைப்பாயிருக்கும்போலிருக்கிறது!

நீண்ட வராந்தாவில் அந்தகர் ஒருவர் எவர் உதவியுமின்றி நடந்து வருவதைக் காண்கையில் இப்படிப்பட்ட ஒரு தொழிற்சாலையில் கண் பார்வையற்ற ஒருவர் என்ன செய்கிறார் என வியப்படைகிறோம். அந்தகர்கள் மட்டுமல்ல, இன்னும் வேறுவிதமான சில அங்கஹீனர்களும் பாரத் எலெக்ட்ரானிக்ஸ் தொழிற்சாலையில் வேலை செய்கிறார்கள். மைசூர் மாநில அந்தகர் நல சங்கத்தின் பொதுச் செயலாளரான ஸ்ரீ சிவ நஞ்சப்பா இங்குதான் வேலை பார்க்கிறார். பகலுணவுக்காக மற்றவர்களைப் போல் க்யூவில் இவர்கள் நிற்க வேண்டியதில்லை; மேலதிகாரிகளின் நுழை வாயிலை இவர்களும் பயன்படுத்தலாம் என்பதைத் தவிர இவர்கள் மற்றத் தொழிலாளர்களைப் போலவே நடத்தப்படுகிறார்கள்.

எண்ணுதல், கம்பிகளை அளவாகத் துண்டித்தல், பொருட்களைப் பரிசீலித்தல் முதலிய வேலைகள் இவ்வந்தகர்களுக்குக் கொடுக்கப்படுகின்றன. பொருட்களைப் பரிசீலிக்க, ஒலியெழுப்பும் இயந்திரமொன்று இவர்களுக்கு உதவுகிறது. தம் வீடுகளிலிருந்து தொழிற்சாலைக்கு வருவதற்குக்கூட இவர்கள் மற்றவர் உதவியை நாடுவதில்லை. சகதொழிலாளர்களின் அன்பைக் குறித்துப் பேசுகையில் இவர்கள் உணர்ச்சிவசப்படுகிறார்கள்.

அவர்களில் ஒருவர் கூறினார்: ''இந்தத் தொழிற்சாலை மிகவும் பெரியது என்றும், இங்குள்ள இயந்திரங்கள் பிரும்மாண்டமானவை என்றும் மற்றவர்கள் பேசிக் கொள்கிறார்கள். எங்களுக்கு எல்லாம் ஒன்றுதான். சுற்றுப்புறம் மிகவும் அழகானதாம். அழகு என்பதற்குப் பிறர் என்ன பொருள் கொள்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் என்னைப் பொறுத்த வரையில் அவ்வார்த்தைக்கு ஓர் அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது. அந்த அர்த்தத்தில் நானும் கூறுகிறேன், இந்தத் தொழிற்சாலை மிகவும் அழகாயிருக்கிறது.''

சுமார் பன்னிரண்டு வருட காலத்தில் உற்பத்தியளவு சுமார் 15.84 கோடி ரூபாய்களை எட்டி, இப்போது சுமார் இருபது கோடி ரூபாய்களைத் தொட்டுக் கொண்டிருக்கிறது. கடன், வரி முதலியன போக சென்ற வருடம் சுமார் 3.81 கோடி ரூபாய்கள் இலாபம் கிடைத்தது. பி. இ. எல். இந்த உபகரணங்களைத் தயாரிப்பதால் இறக்குமதி குறைந்து அந்நியச் செலாவணி சுமார் பதினொரு கோடி ரூபாய் மிச்சமாகியிருக்கிறது.

இது டிரான்ஸிஸ்டர் யுகம். (நம் நாட்டில்தான்! விஞ்ஞான முன்னேற்றமடைந்த நாடுகளில் டிரான்ஸிஸ்டர் யுகத்தைத் தாண்டி, இண்டக்ரேடட் ஸர்க்யூட் யுகத்தையும் கடந்துவிடும் நிலையில் இருக்கிறார்கள்.) இனி எதிர்காலத்தில் ஒரு நாட்டின் முன்னேற்றம், அந்நாடு எலெக்ட்ரானிக்ஸ் துறைக்கு ஒதுக்கும் மூலதனத்தை வைத்துத் நிர்மாணிக்கப்படலாம். அந்த அளவுக்கு எலக்ட்ரானிக்ஸ் நம் வாழ்க்கையோடு ஒன்றி வருகிறது.

பாரத் எலக்ட்ரானிக்ஸ் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டர் ஏ. வி. ஐயப்பா அவர்களுக்கு இவ்வருடக் குடியரசு தின விழாவில் பரம் விசிஷ்ட சேவா பதக்கம் அளிக்கப்பட்டது.

இத்தொழிற்சாலையின் விலைமதிப்பும் அளவும் ஓரளவு பின்வரும் குறிப்பால் அறியப்படலாம்: **இங்கே காவலர்கள்மட்டுமே மூன்றூறு பேர் வேலை செய்கிறார்கள்!**

# சுதந்திரா சாலை!

பிறந்தநாள், கல்யாணம், இப்படி யாதாகிலும் நண்பர்களுக்கு வந்து விட்டால், அவர்களுக்கு என்ன பரிசு கொடுப்பது, அதுவும் புதுமையான பரிசாக என்ன கொடுப்பது என்ற பிரச்னை எழுந்து விடுகிறது.

சென்னை சுதந்திரக்கட்சியின் நகரசபை அங்கத்தினர் திரு தேவநாதன் எம். ஸி. இந்தப் பிரச்னையை இந்த ஆண்டு மிகப் புதுமையான முறையில் தீர்த்து வைத்தார்.

ராஜாஜிக்கு அவரது 92வது பிறந்த நாள். அன்று தங்கள் உடலுழைப்பையே பரிசாக நல்குவது என்று முடிவெடுத்து, சென்னை பழைய மாம்பலம் பகுதியில் சேறும் சகதியும் மிகுந்த, எருமைகள் மட்டுமே உலவி வரத் தகுந்ததாயிருந்த ஓரிடத்தில் சாலை அமைப்பது என்று முடிவு செய்தார்கள். பஞ்சாப் தோட்டம் என்ற பகுதியில் உருவாயிற்று சாலை. சுற்று வட்டாரத்தில் வாழும் நடுத்தர வர்க்கத்தினருக்கும் குடிசை வாழ்வோருக்கும் பெரிய நன்மை செய்ததாயிற்று.

''இந்தச் சாலையின் நீளம் எவ்வளவு ?''

தேவநாதன்: ''1500 அடி நீளம்.''

''எத்தனை பேர் சாலை அமைக்கும் பணியில் ஈடுபட்டிருப்பீர்கள் !''

''சுமார் மூந்நூறு பேர். சென்னை நகரின் பல பகுதிகளைச் சேர்ந்த சுதந்திரக் கட்சி, அங்கத்தினர்கள் ராஜாஜியின் பிறந்த நாளன்று மிக உற்சாகமாக காலை எட்டு மணிக்குத் தொடங்கி மாலை நாலரை மணி வரை நடுவில் சாப்பாட்டுக்குக்கூடக் கலையாமல் தொடர்ந்து சகதியில் இறங்கி வேலை செய்தார்கள்.''





''சமுதாயத்தில் எந்த எந்தத் தரத்தை, படியைச் சேர்ந்தவர்கள் இந்தப் பணியில் ஈடுபட்டார்கள் என்று சொல்ல முடியுமா ?''

''ஓ ! பேஷாக. என்ஜினீயர்கள், சார்ட்டர்ட் அகௌண்டண்டுகள், வர்த்தக ஸ்தாபனங்களில் பணியாற்றும் குமாஸ்தாக்கள், சிறு தொழில்கள் நடத்தும் தொழிலதிபர்கள், போர்ட் டிரஸ்ட் போன்ற அமைப்புக்களில் பணியாற்றும் தொழிலாளர்கள் — இப்படி மேட்டுக்குடியிலிருந்து குடிசை வரை உள்ள பல்வேறு தரத்தைச் சேர்ந்தவர்களும், ஸ்ரீமதி லில்லி நாயர், (ஆயிரம் விளக்குப் பகுதி சுதந்திரக் கட்சியின் உபதலைவர்) போன்ற பெண்களும் உற்சாகமாகப் பங்கு கொண்டனர். கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது !''

''சாலை அமைப்பதற்கு வேண்டிய கல், மண்......?''

'' இவை யெல்லாம் சென்னை நகராட்சி மன்றம் மிக்க பெருந்தன்மையுடன் ரூபாய் மூவாயிரம் அளவுக்கு உதவியதைப் பாராட்ட வேண்டும்.''

''அந்தச் சாலைக்கு என்ன, ராஜாஜியின் பெயரையே வைப்பீர்களோ ?''

''இல்லை. அவருக்கு மிகவும் பிரியமான தொண்டரும் நண்பருமாயிருந்து மறைந்த கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் பெயரை வைக்க வேண்டும் என்று விரும்புகிறோம். இதற்கு சென்னை நகர சபையும் அங்கீகாரம் அளிக்கும் என்று எதிர்பார்க்கிறோம்'' என்றார் தேவநாதன்.

இப்படி ராஜாஜியின் பிறந்த நாளுக்கு மேற்கு மாம்பலம் அருமையான பரிசை நல்கி, ராஜாஜிக்குப் பெரு மகிழ்ச்சியை அளித்தது.

சுதந்திரக் கட்சி உடலுழைப்புக்கு முக்கியத்துவமும் மதிப்பும் அளிக்கும் கட்சி, தொழிலாளர்களின் நலனில் அக்கறை கொண்டுள்ள கட்சி என்பதற் கெல்லாம் சான்றாக விளங்குகிறது இச்சாலை.

— எஸ். வி. எஸ்.

# ரகுபதி ராகவ

மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

12

சச்சிதானந்தம் என்று கடவுளைப் போற்றுகிறோம். சத்தியம் என்கிற சொல், 'சத்' என்கிற பகுதியிலிருந்து பிறந்தது. 'சத்' என்றால் 'இருப்பது', 'உளது' என்பது பொருள். உண்மை ஒன்றே உளது. சத்தியம் ஒன்றே சத் ஆகும். சத்தியம் அல்லாதது சத் அல்ல. இதனாலேதான் சத் என்பது ஆண்டவனுடைய பல பெயர்களில் முக்கியமான ஒரு பெயர். என்னுடைய கருத்தில் உண்மையே கடவுள். சத்தியமே பரம்பொருள்.

அரசனின்றி மக்கள் வாழ முடியாது. தளபதி இன்றி சேனை இருக்க முடியாது. அது போலவே பிரபஞ்சத்துக்கு ஆட்சி செய்யும் ஓர் அரசன் வேண்டும். ஆதலால் கடவுளுக்கு ஈச்வரன், ஆண்டவன், புருஷோத்தமன் முதலிய பெயர்கள் வழங்கி வருகின்றன. ஆயினும் சத்தியம் என்பதே கடவுளுடைய முழுத் தத்துவத்தைச் சரியாகக் குறிக்கும் நாமமாகும்.

உண்மையைக் காண்பதே அறிவு. 'சித்' என்கிற சொல் உண்மை அறிவைக் குறிக்கும் சொல். அதுவும் ஆண்டவனுடைய பெயர்களில் ஒன்று. உண்மை அறிவுடன் ஆனந்தம் எப்போதும் கூடும். உண்மை அறிவே ஆனந்தம். ஆனபடியால் கடவுளைச் சச்சிதானந்தம் என்று தியானிக்கிறோம். பூரணமெய்ம்மையும் ஞானமும் ஆனந்தமும் கலந்து நிற்கும் பொருள் கடவுள்.

நாம் வாழ்வதன் இலட்சியப் பயனானது உண்மைக்குக் கட்டுப்பட்டு இருக்க வேண்டும். நாம் செய்யும் செயல்கள் அனைத்தும் சத்தியத்தில் காலூன்றி இருக்க வேண்டும். உண்மைக்கு மாறான செயல்கள் பாவமாகும். உடலுக்குச் சுவாசம் உயிர் தருவது போல் வாழ்க்கைக்கு உண்மை அமைந்து உயிர் தர வேண்டும். ஜீவ யாத்திரையில் உண்மையைத் தவறாது பற்றுவது என்று ஏற்பட்டு விட்டால் பிறகு எல்லா தர்மங்களும், நியதிகளும், ஒரு சிரமமில்லாமல் அமைந்துவிடும். ஆசாரமும் சீலமும் தாமாகத் தோன்றிக் காக்கப்படும். ஒரு பிரயத்தனமுமின்றி எல்லாம் நடைபெறும். வாய்மையைக் காக்காவிடில் வேறு எந்த அறமும் காக்கப்படாது தவறிப் போகும்.

உண்மை யென்றால் பொய் பேசலாகாது என்பது ஒன்று மட்டும் அல்ல. சத்தியம், மெய்ம்மை, உண்மை என்பதை நாம் விஸ்தரித்து முழுப் பொருளை உணர வேண்டும். மனம், வாக்கு, செயல் மூன்றிலும் உண்மை காக்கப்பட வேண்டும். இப்படி உண்மையைப் பூரணமாக உணர்ந்தவனுக்கு வேறு ஓர் அறிவும் வேண்டியதில்லை. எல்லா ஞானமும் அதில் அடங்கிப் போகும். உண்மைக்குள் அடங்காதது அறிவு ஆகாது, ஞானமும் ஆகாது. அறிவு இன்றி உள்ளத்தில் சாந்தி இல்லை. உண்மை என்கிற உரை கல்லில் எதையும் தேய்த்து உரைத்துப் பார்க்கத் தெரிய வேண்டும். இதைத் தெரிந்து விட்டோமானால் பிறகு ஒரு குறையும் இல்லை. எதைச் செய்யலாம் எதைச் செய்யக் கூடாது. எதைப் பார்க்கலாம் எதைப் பார்க்கலாகாது. எது படிக்கத்தக்கது எதைப் படிக்கலாகாது என்பதெல்லாம் மிக எளிதாகக் கண்டு கொள்ளலாம்.

இவ்வாறு எல்லாவற்றையும் கொடுக்கும் காமதேனுவைப் போன்ற உண்மையை நாம் எப்படி அடைவது? 'மனம் முழுதும் செலுத்திய அப்யாஸத்தாலும், வேறு பொருள்கள் மேல் ஆசை வைக்காமல் இருக்கும் வைராக்கிய நிலையாலும்' என்கிறது சாஸ்திரம். பக்தியோடு நாடினாலும், ஒருவனுக்கு உண்மையாகத் தோன்றுவது மற்றொருவனுக்கு உண்மையாகத் தோன்றாது. இதனால் குற்றமில்லை. தூய உள்ளத்தோடு செய்யப்பட்ட முயற்சியினால் காணப்படும் உண்மை, ஒருவனுக்கு ஒரு விதமாகவும் இன்னொருவனுக்கு மற்றொரு விதமாகவும் வேறுபட்டுத் தோன்றுவது ஒரு மரத்திலுள்ள பல இலைகள் மாதிரி. ஆண்டவன் பல்வேறு வடிவங்களில் காணப்படுகிறான். ஆயினும் அவன் ஒருவனே என்று அறிவோம். சத்தியமே அவன் வடிவமும் பெயரும். பல விதமாக நாம் உண்மையைக் கண்டு பக்தி செலுத்துவதில் குற்றமில்லை. அவனவனுக்கு அது சத்தியமேயாகும். அவனவன் கண்ட உண்மையை நோக்கி அவனவன் பக்தி செலுத்த வேண்டும். அவ்வாறு செய்தால், குற்றம் இருப்பினும் நீங்கிப் போகும்.

உண்மையை நாடுவது ஒரு தவமாகும். உண்மைக்காகச் செய்யும் தவத்தில் உற்ற நோய்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். உயிரையும் இழக்க வேண்டியதாகும். சுய நலத்தை முற்றிலும் விலக்கி உண்மையை நாட வேண்டும். அப்படிச் செய்வதால் வழி தப்பிப் போகாது. தப்பினாலும் அது நெடுங்காலம் பிறழாது. தவறான வழியில் சென்றால் கட்டாயம் இடறி விழ வேண்டியதாகும். ஆயினும் பின்பு நேர் வழிக்கு வந்துவிடுவோம்.

சத்தியமே பக்தியுமாகும். அதுவே தெய்வத்தை அடையும் மார்க்கம். இதில் பயப்படுவதற்கு இடமில்லை. தோல்வியும் இல்லை. உயிர் நீத்தாலும் அதுவே அமிருத நிலைக்குக் கோபுர வாயில். ஹரிச்சந்திரன், பிரகலாதன், ராமசந்திரன், இமாம்ஹஸன், இமாம்ஹுஸேன் மற்றும் கிறிஸ்துவ முனிவர்கள் இவர்களுடைய சரித்திரங்களைக் கற்றுத் தியானிக்க வேண்டும்.

ஆகா! உலகத்தில் அனைவரும் சத்தியத்தையே கடைப்பிடித்து எல்லாக் காரியங்களிலும் உண்மையே வழி என்று நடந்து கொள்வார்களாகில் இந்த உலகம் எவ்வளவு சுதந்திரமாக இருக்கும்! எல்லாவற்றிலும் சத்தியமே நம்முடைய வழி என்று நடந்து கொண்டு முடிவில் உடலை விட்டு உயிர் பிரியும் தருணம், அந்த சத்தியப் பொருளிலேயே ஒன்றுபட்டுப் போவோமானால் உலகம் எவ்வளவு ஆனந்தமாக இருக்கும்! சத்தியமே ஆண்டவனுடைய வடிவமாகவும் என்னுடைய செல்வமாகவும் இருந்து வந்திருக்கிறது. அனைவருக்கும் அவன் அருளால் அவன் சத்திய ரூபமே செல்வமாகுக!

[யரோதா சிறையில் எழுதியது]

# இவரால் முடியுமா?

வண்டியோட்டிச் செல்லும் வேளையில் ஒவ்வொரு டிரைவரும் எந்த நிமிஷமும் உஷாராக இருந்து, சரியான முடிவுகளைச் சட்டென எடுப்பது அவசியம்.

ஸதர்ன் ரோட்வேஸின் மற்றவர்களின் தரத்திற்கேற்ப இவர் இருக்கவேண்டுமானால், இவரிடம் மெய்யான தரம் இருந்தாக வேண்டும்; முடிவுகளை உடனுக்குடன் எடுத்தாக வேண்டும்.

அதனால்தான் வேலைக்கு நியமிக்கு முன் ஒவ்வொரு டிரைவரையும் நாங்கள் நன்கு சோதிக்கிறோம். பிறகும் அவ்வப்போது இவர்கள் சோதிக்கப்படுகிறார்கள்.

உடலியலையும், உளவியலையும் பொறுத்து நாங்கள் நடத்தும் பூரணப் பரிசோதனைகள், தூரத்தைப்பற்றிய துல்லியமான மதிப்பீடு, பக்கவாட்டில் முழுமையாக பார்க்கும் திறன், வண்ணங்களை நன்கு பகுத்தறியும்பான்மை, பிரகாசமான ஒளியால் கூசும்கண்களை விரைவில் மறுபடி இயக்கும் வல்லமை, கண்—கால்களிடை கச்சிதமான ஒத்துழைப்பு ஆகிய அனைத்தும் டிரைவரிடம் பொருந்தியிருக்குமாறு பார்த்துக் கொள்கின்றன.

தனது திறமையான சேவையானது தனது டிரைவர்களின் திறமையையும் சார்ந்துள்ளது என்பதை ஸதர்ன் ரோட்வேஸ் எப்போதும் உணர்ந்திருக்கிறது.

இதன் லாரிகள் இரவு 11-மணியிலிருந்து அதிகாலை 4-மணிவரை ஓட்டப்படுவதில்லை — ஏனெனில், இந்த நேரம்தான் மனிதனுக்கு ஆழ்ந்த உறக்கம் வரும் நேரம்; இந்த சமயத்தில்தான் பெரும்பாலான சாலை விபத்துகள் நடக்கின்றன என்பதும் கண்டறியப்பட்டுள்ளது.

தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், மைசூர், கேரளம் முதலிய மாநிலங்களின் மக்களிடை ஸதர்ன் ரோட்வேஸ் பெருநம்பிக்கை பெற்றிருப்பதற்கான காரணங்களில் இது ஒன்று.

உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்






**ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட்**

(இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

மதுரை

# சாருலதா

கி.ராஜேந்திரன்

அத்தியாயம் 16

## முடிவு எப்போது?

மூன்று தனித் தனி பாங்குகளிலிருந்து வெவ்வேறு தேதிகளில் ஐயாயிரம், மூவாயிரம், இரண்டாயிரம் என்று பழைய, பழகிய நூறு ரூபாய் நோட்டுக்களாகப் பார்த்து வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான் சாரங்கன். சாருலதா பத்தாயிரம் ரூபாயையும் வாங்கித் தனது மேஜையின் இரண்டாவது டிராயரில் வைத்துப் பூட்டினாள். ஒரு வாரம் கழித்து அவள் எதையோ எடுக்கக் குறிப்பிட்ட அந்த டிராயரைத் திறந்த போது பணம் அதில் இல்லை என்பதைக் கவனித்தான் சாரங்கன். இடையில் இரண்டு தடவை அந்த லாரல் அண்டு ஹார்டி ஆசாமிகள் வந்த போது அவள் உத்தரவு பெற்று அவர்களை அவள் அறைக்கு அழைத்துப் போயிருந்தான் சாரங்கன். அவளிடம் தனிமையில் பேச அவர்கள் விரும்பினார்கள். அதற்கு அவள் சம்மதம் அளித்தாள். பத்தாயிரம் ரூபாய் பணமும் அவர்களிடம்தான் போய்ச் சேர்ந்திருக்கும் என்பதில் சாரங்கனுக்குச் சந்தேகமே இல்லை. ரசீது ஏதும் தரப்படவில்லை. அவன் மனம் ரொம்பவும் வேதனையுற்றது. ஆனால் சாருலதாவோ முன்னைக்கிப்போது கவலையற்றவளாகவும் உற்சாகம் மிகுந்தவளாகவும் காணப்பட்டாள்.

"சாரங்கன்! வாட்ச் பாக்டரி திறவ உதவிய நமது ஜப்பானிய நண்பர்களுக்கு அவர்கள் தாய்நாடு திரும்பும் முன்னர் ஒரு 'பார்ட்டி' கொடுக்க வேண்டாமா?" என்று கேட்டாள் அவள்.

"கனிமராவில் ஏற்பாடு செய்யட்டுமா டின்னருக்கு? அடுத்த சனிக்கிழமை இரவு வைத்துக் கொள்ளலாம்."

"அன்று வேறு எங்கேஜ்மெண்ட் ஏதுமில்லையே, எனக்கு?"

"இல்லை, டைரியைப் பார்த்துவிட்டேன். முக்கியமாக அழைக்கப்பட வேண்டியவர்களின் லிஸ்ட் தயாரித்து எடுத்து வருகிறேன். ஏதாவது விட்டுப் போயிருந்தால் சேர்த்து விடுங்கள்."

"ஓ. கே.!" என்ற சாருலதா, மேஜை மேல் அவள் கையெழுத்துக்குத் தயாராயிருந்த கடிதங்கள் மீது பார்வையைச் செலுத்தினாள்.

'காரியம் முடிந்தது; சாரங்கன் போகலாம்' என்று அவள் இப்படி சூசகமாக அறிவித்துவிட்ட போதிலும் அவன் நகரவில்லை; நின்றான்.



"மஹிபாலும் சந்திரபாலும் மறுபடியும் வந்தால் என்ன சொல்ல?"

படித்துக் கொண்டிருந்த கடிதத்திலிருந்து கவனத்தைத் திருப்பி, சாரு அவனைக் கடுமையாக நோக்கினாள். "நீங்கள் இன்னும் இங்கேதான் இருக்கிறீர்களா?" என்று கேட்டவள் பின்னால் சாய்ந்து, காலால் தரையை உந்தினாள். நாற்காலி சுழன்றது. அவள் பார்வை ஜன்னல் பக்கம் திரும்பியது. "அவர்கள் இனி வர மாட்டார்கள்" என்றாள்.

"எதனால் அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?"

"சாரங்கன்! ஐ டோண்ட் லைக் டு டிஸ்கஸ் தி மேட்டர்!"

"நீங்கள் அதைப் பற்றி விவாதிக்க விரும்பாமல் இருக்கலாம். நடந்ததை மறந்து கூடப் போய் விடலாம். ஆனால் மஹிபாலும் சந்திரபாலும் சும்மா இருப்பார்களா என்பது சந்தேகம். அவர்கள் கைக்குப் போய்ச் சேர்ந்த பத்தாயிரம் ரூபாய் திருப்பியை

உண்டாக்காது: நெய்யாக உருகி ஆசைத் தீயை வளர்க்கும்.''

''ஆசைத் தீயைப் பற்றி நமக்குக் கவலை இல்லை, சாரங்கன்! அதன் தீயில் அந்தப் புகைப்படம் சாம்பலாகி விட்டது! பணம் கேட்க இனி அவளுக்கு வாய் வராது!''

''படத்தைக் கொடுத்துவிட்டார்களா, உங்களிடம்?''

''நெகடிவுடன் சேர்த்துத்தான். வாங்கி, தானே என் கைப்படக் கொளுத்தி விட்டேன்!''

''எனக் கென்னமோ இன்னமும் யோசனையாகத்தான் இருக்கிறது.''

''சாரங்கன்! பொழுது விடிந்த பிறகு ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்காமல் இரவு கண்ட பயங்கரச் சொப்பனத்தைப் பற்றியே யாராவது நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்களா?''

வேலையைக் கவனிக்காமல் மேலும் அங்கே நிற்பது உசிதமில்லை என்று புரிந்ததால் சாரங்கன் சென்றான்.

அவன் அப்பால் போய் ஐந்து நிமிஷங்களில் டெலிபோனில் லில்லியின் குரல் ஒலித்தது. ''மஹிபாலும் சந்திரபாலும் உங்கள் அறைக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் அவள். வடதுருவத்தில் செய்யப்பட்ட பனிக் கட்டி பொம்மையாக உறைந்து போனாள் சாருலதா.

அதிர்ச்சியைச் சமாளித்துக்கொண்டு பேசும் சக்தியைப் பெற்றதும் அவள் லில்லியைச் சாடினாள். ''எதற்கு அவர்களை இங்கே அனுப்புகிறாய், என் அனுமதி இல்லாமல்? சாரங்கனைப் பார்க்கச் சொல்கிறதுதானே?''

''நான் சொன்னேன் சாரு!'' லில்லியின் குரல் நடுங்கியது. '''சற்று உட்காருங்கள்' என்றால்கூடக் கேட்கவில்லை அவர்கள். 'எப்போது வேணுமானாலும் நாங்கள் வரலாம் போகலாம் என்று சாருலதா அனுமதி கொடுத்திருக்கிறாள்' என்றார்கள். அப்படிக் கூறியபடியே உன் அறையை நோக்கி நடந்து விட்டார்கள்.''

''நான்ஸென்ஸ்!'' என்றாள் சாருலதா ஆத்திரத்துடன். அதற்குள் கதவு திறக்கப்பட்டது. ''ரிஸப்ஷனிஸ்டைக் கோபிக்காதே, சாரு! அவள் பேரில் தப்பில்லை'' என்றான் மஹிபால்.

''தவறு உன்னுடையதுதான் சாரு!'' என்றான் சந்திரபால். ''நாங்கள் எப்போது வேணுமானாலும் வந்து போகலாம், தடை செய்ய வேண்டாம் என்று நீ ரிஸப்ஷனில் சொல்லி



வைத்து விட்டால் நாங்களும் அநாகரிகமாக நடந்து கொள்ள நேராது.''

''எக்ஸ்க்யூஸ் மீ, சாரு!'' என்றாள் லில்லி, ஃபோனில். ''நான் எவ்வளவோ முயன்று பார்த்தேன். அவர்கள் பிடிவாதமாகவும் முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டார்கள். எனக்குப் பயமாயிருந்தது. சாரங்களை உடனே உங்கள் ரூமுக்கு அனுப்பிவைக்கிறேன்.''

''வேண்டாம்'' என்றாள் சாருலதா. ''அவர் இனி இங்கே வந்து சாதிக்கப் போவது ஒன்றுமில்லை.'' —ஃபோனை வைத்துவிட்டு நீண்ட துயரப் பெருமூச்சுடன் அவள் நிமிர்ந்தாள். தனது கலவரத்தையோ வேதனையையோ காட்டிக் கொள்ளாமல் அவர்களை ஏறிட்டுப் பார்த்தாள். ''மறுபடியும் எதற்காக வந்தீர்கள் ?''

''வந்தவர்களை 'வா' என்று அழைப்பதில்லையா சாரு?'' என்றான் ஒருவன்.

''உட்காருங்கள் என்று சொல்லக் கூடாதா?'' என்றான் மற்றவன்.







Bensons/2868/37 AM

# உங்களுக்கு சுவையுள்ள, கெட்டியான, ஸ்ட்ராங்கான மற்றும் உடனே தயாராகும் காபி வேண்டுமா...

இதோ **ப்ரூ** இருக்கிறது




BRU

கெட்டியான,
ஸ்ட்ராங்கான
காபி-சிக்கரி கலவைதான் ப்ரு.
உடனடியாக தயாராகிவிடுகிறது!
புத்துணர்ச்சியளிக்கும்
மிகச் சிறந்த பானம்.

**ப்ரூக் பாண்ட்**

**ப்ரூ** இன்ஸ்டன்ட்

காபி சிக்கரி ப்ளெண்ட்

அவள் அழைக்காமலே வந்தவர்கள் அவள் உபசரிக்காது போனாலும் ஸோபா ஸெட்டை நோக்கி நடந்து அமர்ந்தார்கள். கால்மேல் கால்போட்டு நன்றாகச் சாய்ந்து கொண்டார்கள்.

''ஏன், சாரு? விஸ்கி அண்டு சோடா, ஜின் அண்டு டாவிக் எல்லாம் உன் நண்பர்களுக்குக் கொடுத்து உற்சாகப்படுத்துவாயாமே? நாங்கள்கூட உன் நண்பர்கள்தானே!''

''வோட்காதான் எனக்கு வேண்டும், இருக்கிறதல்லவா?''

ஸோபாவின் எதிரே மேஜை மேலிருந்த, தந்த வேலைப்பாடுகளுடன் கூடிய அலங்காரமான பெரிய பெட்டி நிறைய சிகரெட்டுகள் இருந்தன. பெட்டியைத் திறந்து விலை உயர்ந்த சிகரெட்டுக்களை ஆளுக்கொன்றாய்ப் பற்ற வைத்துக் கொண்டதுடன் சட்டைப் பாக்கெட்டுக்களையும் நிரப்பிக் கொண்டார்கள்.

சாருலதா அமைதியாகக் கேட்டாள்: ''எவ்வளவு பணம் வேண்டும், உங்களுக்கு?''

''இப்போதைக்கு இருபதாயிரம் ரூபாய் இருந்தால் போதும்.''

''பத்து நாட்களுக்கு முன்னால் தானே பத்தாயிரம் கொடுத்தேன்; அதற்குள் என்ன?''

மஹிபால் சிரித்தான். ''நேற்று சாப்பிட்டோமே என்பதால் இன்று சாப்பிடாமல் இருந்து விடுகிறோமா சாரு?''

சந்திரபால் சொன்னான்: ''போன வருஷம் மூன்று லட்சம் லாபம் வந்ததே என்பதால் இந்த வருஷம் லாபமே வேண்டாம் என்று இருந்து விடுவாயா?''

''நான் பணம் கொடுக்க மாட்டேன் என்றால்?''

''நீ தராவிட்டால் என்ன நடக்கும் என்பது உனக்கே தெரியாதா, சாரு? சாருலதாவைப் பேட்டி காண வந்து எத்தனை பத்திரிகை நிருபர்கள் ஏமாற்றத்துடன் திரும்பி இருக்கிறார்கள்?''

''வெறும் வாயை மெல்கிறவர்களுக்குப் பிடி அவல் இல்லை; படி அவலே வைத்திருக்கிறோம் நாங்கள்!''

''அந்தப் புகைப்படத்தைத்தான் நெகடிவ்வோடு சேர்த்து என்னிடம் தந்து விட்டீர்களே, இனி நீங்கள் எந்த ஆதாரத்தின் மீது எனக்கு என்ன தீங்கு விளைவித்துவிட முடியும்?''

''ஒரு ஃபோட்டோதானே கொடுத்தோம்? இன்னும் நூறு பிரிண்ட் இருக்கிறது எங்களிடம்.''

''என்னிடம் நீங்கள் கொடுத்த நெகடிவ், ஒரு என்லார்ஜ்மெண்ட்டைக் காப்பி எடுத்தபோது கிடைத்தது: ஒரிஜினல் நெகடிவ் உங்களிடமே பத்திரமாயிருக்கிறது. அப்படித்தானே?''

''நீ சாமர்த்தியசாலி சாரு, உனக்கு உண்மை தெரியாமல் போகுமா?''

''திடுதிப் பென்று இருபதாயிரம் கொடு என்றால் நான் எங்கே போவேன்? எவ்வளவு தான் பணக்காரரானாலும் கையிலே ஆயிரக்கணக்கில் பணம் வைத்திருப்பார்களா, என்ன?''

''பணத்துக்கு ஏற்பாடு செய்ய நாங்களா சொல்லித் தர வேண்டும்? அதுவும் சாருலதாவுக்கு?''

''தொழில் வர்த்தகத் துறையில் மாயா ஜாலங்கள் புரிகிறவள் என்று புகழ் பெற்றவளாயிற்றே நீ!''

''சரி, இன்னும் ஒரு மாதம் கழித்து வாருங்கள்!''

''சூச்சூசூ! ஒரு மாசம்!''

''அத்தனை நாள் காத்திருக்க முடியாதே சாரு!''

''மூன்று வாரம்?''

''அதிகபட்சம் பத்து நாள் கழித்து வருகிறோம்; அன்று பணம் கிடைத்தாக வேண்டும், எங்களுக்கு?''

''தொலைகிறது என்று இருபதாயிரம் கொடுத்து விடுகிறேன். ஆனால் இது தான் கடைசித் தடவை. மறுபடியும் வந்து தொல்லை கொடுத்தீர்களோ?'' சாருலதா மேஜையின் மேல் டிராயரைத் திறந்து அதிலிருந்து ஒரு துப்பாக்கியை எடுத்து அவர்களை நோக்கி நீட்டினாள். இதை எதற்கு வைத்திருக்கிறேன், தெரியுமா? உங்களைப் போன்ற அயோக்கியர்களிடமிருந்து என்னைப் பாதுகாத்துக் கொள்ளத்தான் லைசென்ஸ் பெற்று இதை வாங்கி வைத்திருக்கிறேன்!''

''பயமுறுத்துகிறாயா சாரு? நாங்கள் நடுங்க வேண்டுமா?''

''எங்களை நீ சுட்டுக் கொன்று விட்டால் உனக்கு மரண தண்டனை விதிக்க எந்த நீதிபதிக்கும் மனசு வராது!''

''அழகான உன் கழுத்தில் கயிறு இறுகுவதைக் கற்பனைக் கண்கொண்டு பார்க்கக்கூட எவனுக்கும் பிடிக்காது தான்.''

''ஆனால் சட்டம் இருக்கிறதே அதைத் தளர்த்தலாமே ஒழிய உடைத்து எறிய முடியாதே!''

''இருபது வருஷமாவது உன்னைக் கம்பி எண்ண வைத்துவிடுமே சட்டம்!''

''அப்புறம் உன் அப்பாவின் கதி? சாருலதா என்டர்பிரைஸஸின் எதிர்காலம்?''

''உனக்கு இருக்கும் பெயர், புகழ், அந்தஸ்து எல்லாம் என்னவாகிறது?''

மாறி மாறி அவர்கள் பேச சாருலதாவுக்குத் தலை சுற்றியது. ''விம் யூ

பிளீஸ் கெட் அவுட் ப்ரம் ஹியர்?'' என்று கத்தினாள். அவள் கரங்கள் நடுங்கின. அந்த நடுக்கத்தின் விளைவாகத் துப்பாக்கி விசையை எங்கே அவள் விரல் அழுத்தி விடுமோ என்று அஞ்சியவர்களாக அவர்கள் புறப்பட்டார்கள்.

கதவைத் திறந்து பிடித்துக் கொண்டவன் காலை வெளியே வைப்பதற்கு முன்னால் சொன்னான்: ''ஒரு தங்கச் சுரங்கத்தைக் கண்டு பிடித்து விட்ட பிறகு பாளம் பாளமாக அதை வெட்டி எடுக்காமல் விட்டால் அது முட்டாள்தனமில்லையா ?''

''ஆனால் நாங்கள்தான் கெட்டிக்காரர்களாயிற்றே!'' என்றான் இன்னொருவன்.

''நிலச் சரிவு ஏற்பட்டுச் சுரங்கத்துக்குள்ளேயே நீங்கள் சமாதி ஆகிவிடாமல் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் சாரு துப்பாக்கியை உயர்த்தி.

அவர்கள் கொஞ்சம்கூடப் பயந்ததாகத் தெரியவில்லை. சிரித்துக் கொண்டே சென்றார்கள். துப்பாக்கியை மேஜை டிராயரில் வைத்து அறைந்து சாத்தினாள் சாருலதா.

மேஜை மேல் இரண்டங்குல கனத்துக்கு அவள் கவனித்துப் படித்துக் கையெழுத்திட வேண்டிய தாள்களும் பதில் எழுத வேண்டிய கடிதங்களும் குவிந்து கிடந்தன. ஆத்திரத்துடன் அவற்றைக் கரத்தின் ஒரு வீச்சிலே ஒதுக்கித் தள்ளினாள். பொத்தென்று தரையில் விழுந்தவற்றை மீண்டும் எடுத்து மேஜை மேல் ஒழுங்குபடுத்தி வைத்தாள்.

'இருபது நாட்களுக்கு ஒரு தரம் இருபதாயிரம் ரூபாயா ? முடிவில்லாமல் இவர்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருக்க முடியுமா ? இருபதாயிரம் ரூபாய் என்பது ஒரு பெரிய விஷயமில்லை. ஆனால் பணம் இருக்கிறது என்பதால் அதை நம் இஷ்டப்படிச் செலவழித்துவிட முடிகிறதா என்ன ? வருமான வரி இலாக்காவினர் பாங்கில் கட்டப்படும் பணத்துக்கு மட்டுமில்லை; பாங்கிலிருந்து எடுக்கப்படும் பெரிய தொகைகளுக்கும் கணக்குக் கேட்பார்கள். அந்தப் பெரிய தொகைகள் வேறு எதில் முதலீடு செய்யப்பட்டிருக்கின்றன என்று விவரம் கூற வேண்டும். பெரிய தொகைகளைப் பாங்கிலிருந்து எடுத்து விட்டு அதற்குச் சரியான காரணம் கொடுக்காது போனால் விடமாட்டார்கள். விசாரணை, வழக்கு என்றெல்லாம் வந்து விடும். பிறகு என்ன செய்வது ? கருப்புப் பணம் என்று இருக்கத்தான் செய்கிறது. ஆனால் பத்து இருபது என்று இவர்களுக்குக் கொடுத்துக் கொண்டு போகும் வேகத்தில் அது எத்தனை நாளைக்குக் காணும் ? நகைகளை விற்கலாமா? எங்கே கொண்டு போய், யார் மூலம் விற்பது? சாருலதா நகைகளை விற்றாள் என்பது வெளியானால் பங்கு மார்க்கெட்டே சரிந்து விடுமே! கையிருப்பது போதாது; மேலும் கருப்புப் பணம் தயார் செய்தாக வேண்டும்.

சாருலதா அறையில் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தாள். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவளாக மேஜை எதிரே அமர்ந்து பர்ஸனல் லைனில் சாருலதா இன்ஜினீரிங் கைலாசத்தைக் கூப்பிட்டாள். அவளுக்கிருந்த பதற்றத்தில் இரண்டு தடவை ராங் நம்பர் விழுந்தது. ஒரு வழியாகக் கைலாசத்தின் குரல் கேட்ட போது இவள் சொன்னாள்: ''ஏன் எதற்கு என்று கேட்காமல் எனக்கு நீங்கள் ஒரு பெரிய உபகாரம் பண்ண வேண்டும் !''

''உனக்கில்லாத உதவியா சாரு?''

''சாருலதா இன்ஜினீரிங்கில் ஒன்றிரண்டு இயந்திரங்கள் அதிகப்படியாக இருக்கின்றன அல்லவா ?''

''ஒரு ஜிக் போரிங் மிஷினும் ஒரு டாப்பிங் மிஷினும் உள்ளன.''

''அவற்றில் ஏதேனும் ஒன்றையோ அல்லது இரண்டையுமேயோ விற்று விட முடியுமா ?''

''எதற்காக விற்க வேண்டும் சாரு? அவை அதிகப்படியாக உள்ளனவே தவிர உபயோகமின்றி இருக்கவில்லை. ஏதாவது ஒரு மிஷின் பழுதாகி விடும்போது இவை 'ஸ்டாண்ட் பை'யாக இருந்து பயன்படுவதால் வேலை தடைப்படாமல் தொடர்கிறது. அதை 'லாக்ட் அப் காப்பிட்டலாக' நினைக்கக் கூடாது நீ!''

''கைலாசம்! நான் பிஸினஸ் ரீதியில் பேசவில்லை; பர்ஸனலாக எனக்கு உதவும்படி கேட்கிறேன்.''

''எனக்குப் புரியவில்லை, சாரு! அந்த மிஷின்கள் இரண்டும் நமது தொழிலகத்தின் தங்கு தடையில்லாத இயக்கத்துக்கு அவசியத் தேவைதான் என்கிறேனே!''

''ஆறு மாசம் கழித்து மறுபடியும் அதே போன்ற மிஷின்களை புதிதாகவோ ஸெகண்ட் ஹாண்டிலோ என்ன விலையானாலும் சாருலதா இன்ஜினீரிங்கில் நாம் வாங்கிவிடலாம்.''

''இப்போது இவற்றை விற்பானேன், அப்புறம் அவற்றையே வாங்குவானேன் ?''

''கைலாசம்! அவற்றை புக் வால்யுவைவிட அதிக விலைக்கு விற்க முடி

யும் இல்லையா? புக் வால்யுவுக்குச் செக் வாங்குங்கள். அதிகப்படிப் பணத்தைக் கேஷாகப் பெற்று என்னிடம் தந்து விடுங்கள். இப்போ எனக்குக் கொஞ்சம் பணம் முடையாக இருக்கிறது.''

''சாரு! உனக்கு என்ன வந்து விட்டது? பணம் வேண்டுமென்றால் செக் எழுதிச் சாரங்கனிடம் கொடு. எதிர்த்தாற் போல் பாங்கு இருக்கிறது: போய் வாங்கி வருகிறேன்!''

''கைலாசம்!'' — உரக்கப் பேசினாள் சாருலதா. ''ஏன், எதற்கு என்று கேட்காமல் என் கோரிக்கையை நிறைவேற்றுவதாக ஆரம்பத்திலேயே வாக்களித்தீர்கள்!''

''சாரு! உன் கட்டளைப்படி நடக்க நான் கடமைப்பட்டிருக்கிறேன். எனக்காகக் கொஞ்சமாகவா செய்திருக்கிறாய் நீ?''

''எவ்வளவு கிடைக்கும் எனக்கு இந்த டீலில்?''

''நீ கேட்பது சுலபமாக முடியக் கூடிய காரியம்தான். நம்மிடம் இருப்பவை ஜெர்மன் மிஷின்கள். இங்கே எளிதில் கிடைக்காதவை. துடைத்துத் துடைத்து வைத்துக் கொண்டிருக்கிறேன் நான். நாம் அவற்றைக் கொடுத்து விடப் போகிறோம் என்று தெரிந்தால் போதும். இம்போர்ட் செய்வதில் உள்ள தொல்லைகளைப் பார்க்கையில் பிளாக்கில் பணம்

## தமிழ்நாட்டில் எல்லை காந்தி



### நிகழ்ச்சி நிரல்

**1 - 1 - 70**

காலை 11-00 திருச்சிக்கு விமான மூலம் பயணம்.
பகல் 12-00 திருச்சி வருகை.
மாலை 5-30 திருச்சியில் பொது மக்கள் வரவேற்பு.

இரவு திருச்சியில் தங்குகிறார்.

**2 - 1 - 70**

காலை 8-00 காந்தி கிராமம் கிளம்புகிறார்.
,, 10-00 காந்திகிராமம் வருகை.
மாலை 6-00 திண்டுக்கல்லில் பொது மக்கள் வரவேற்பு.

இரவு காந்திக் கிராமத்தில் தங்குகிறார்.

**3 - 1 - 70**

காலை 8-00 வத்தலக்குண்டு பயணம்.
,, 9-00 வத்தலக்குண்டு வருகை.
,, 9to11-00 கிராமதானத் திட்டத்தைப் பார்வையிடல்.
பகல்11to12-00 கிராமதான மகாநாடு.
பகல் 12-00 } வத்தலக்குண்டு சர்வோதய
மாலை 4-00 } ஆசிரமத்தில் சிரமபரிகாரம்.
,, 4-00 கிராமதான சமூகப் பயிற்சி நிலையத்தைப் பார்வையிடுகிறார்.
,, 5-00 மதுரைக்குப் புறப்படுகிறார்.
,, 6-30 மதுரை வந்தடைகிறார்.

**4 - 1 - 70**

காலை 9-30 தமிழ்நாடு நிர்மாண ஊழியர்களைச் சந்தித்தல்.
மாலை 6-30 நகரசபை வரவேற்பும் பொதுக் கூட்டமும்-தமுக்கம்மைதானம்.

**5 - 1 - 70**

காலை 7-00 திருநெல்வேலிக்குப் புறப்படுகிறார். (பகல் உணவு திருநெல்வேலி சர்க்யூட் வீட்டில்.)
மாலை 7-30 பொதுஜன வரவேற்பு திருநெல்வேலியில்.

இரவு சர்க்யூட் வீட்டில் தங்குகிறார்.

**6 - 1 - 70**

காலை 7-00 திருவனந்தபுரம் புறப்படுகிறார்.

**9 - 1 - 70**

இரவு ... மலப்புரத்திலிருந்து கோவை வருகை.

இரவு சர்க்யூட் வீட்டில் தங்குகிறார்.

**10 - 1 - 70**

காலை 8-00 திருப்பூருக்குக் கிளம்புகிறார்.
,, 9-30 காங்கேயம், பழையூர் பார்வை
பகல் 12-00 திருப்பூர் சேர்தல். [யிடல்.
பகல் 12-00 } வீரபாண்டி சர்வோதய கேந்
மாலை 4-00 } திரத்தில் உணவும்-ஓய்வும்.
மாலை 4-00 திருப்பூரில் பொது மக்கள் வரவேற்பு.
,, 5-00 கோவைக்குப் புறப்படுகிறார்.
,, 6-30 கோவையில் பொது மக்கள் வரவேற்பு.

11-1-1970 பங்களூர் வழியாகப் பம்பாய் பயணம்.

கொடுத்தே வாங்கலாம் என்று 'க்யூ' வில் காத்திருப்பார்கள்!''

''தாங்க்யூ கைலாசம்! நான் உங்கள் உதவியை மறக்கமாட்டேன்.''

''சாரு, இதனாலெல்லாம் உனக்கு ஏதாவது தீங்கு நேரக் கூடாதே என்ற கவலைதான் எனக்கு!''

''கைலாசம்! மறந்து போனகாதீர்கள்! நமக்குப் பணம் தேவை என்பதால் அவற்றை விற்கவில்லை; அதிகப்படியாக இருப்பதால் இரண்டு மிஷின் களைத் தள்ளி விடுகிறோம்!''

''யோசித்துத்தான் முடிவு செய்திருக்கிறாயா, சாரு?''

''பைதிவே, சனிக்கிழமை கன்னி மராவில் ஒரு பார்ட்டி, நமது ஜப்பானிய நண்பர்களுக்கு. சாருலதா கடிகாரங்கள் மார்க்கெட்டில் சக்கைப் போடு போடும் என்பதற்கான அறிகுறிகள் நிறைய இருக்கின்றன. முழு மூச்சில் உற்பத்தி ஆரம்பமாகுமுன்னரே ஷேர் வேல்யூ கூடுவதைக் கவனித்தீர்களா? சாரங்கன் இன்விடேஷன் அனுப்புவான். அவசியம் வந்து சேருங்கள்! குட் பை!''

வர்த்தக ரீதியான ஓர் ஒப்பந்தத்தை ரொம்ப சாமர்த்தியமாகப் பேசி தனக்குச் சாதகமாக முடித்துக் கொண்டதால் ஏற்படக்கூடிய திருப்தி போல் சாருலதா உணர்ந்தாள். டெலிபோன் ரிஸீவரை உரிய இடத்தில் வைத்தாள். அது வரை ஒரு போட்டியில் வெற்றி பெறும் வேகம் இருந்தது அவளுக்கு. ஆனால் கைலாசத்தைப் பேச்சில் ஜெயித்த பிறகு அதன் பின் விளைவுகள் நினைவுக்கு வந்து அவளைச் சோர்வுறச் செய்தன.

மேலும் கொஞ்சம் கருப்புப் பணத்துக்கு வழி செய்தாகி விட்டது. பத்து நாட்களில் இருபதாயிரம் வாங்கிக் கொண்டு போய் விடுவார்கள். அப்புறம் பேசாமல் இருப்பார்களா? மஹிபாலும் சந்திரபாலும் மீண்டும் மீண்டும் வரமாட்டார்களா? அப்போது என்ன சொல்லப் போகிறோம், செய்யப் போகிறோம்?

ஒரு பெரிய கேள்விக்குறி அவள் முன் நின்றது. அதை ஒதுக்கி விட்டுக் காரியாலய அலுவல்களில் கவனம் செலுத்த முயன்றாள்; முடியவில்லை.

சிந்தனை இன்றி இயல்பாக அவள் இடக் கரம் டெலிபோனை எடுத்தது. வலக்கரத்தின் விரல் வேணுகோபாலின் டெலிபோன் நெம்பரைச் சுற்றியது.

''டாக்டர்! வேணுகோபால்!''—கவலைகள் மறந்து அவளது கலகலப்பான சுபாவமும் உற்சாகமும் திரும்பின. குரலை மாற்றிக் கொண்டு வேடிக்கை செய்தாள். ''ஹல்லோ, டாக்டர்! சாம்புவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லை. வயிற்று வலி என்று துடிக்கிறான். கொஞ்சம் சிரமத்தைப் பொருட்படுத்தாது உடனே வந்து பார்த்துவிட்டுப் போகிறீர்களா?''

''எஸ் சாரு, என்ன விசேஷம்?''

''தொளா குரூட்! ஏமாந்து போனதாக நடிக்கவாவது கூடாதா?''

''சாரு! உன் சாயம் வெளுத்துப் போச்சு! இதுதான் நீ ஆபீஸ் நடத்துகிற லட்சணமா?''

''வேலைக்கென்ன எப்போதும் இருக்கத்தான் செய்கிறது. மலையாகக் குவிந்திருக்கும் வேலைகளுடன் சதா போராட்டம்தான்.''

''அப்படித்தான் ஒரு பிரமையை ஏற்படுத்தியிருக்கிறாய் நீ! ஆனால் இப்போ காரியாலய நேரத்தில் விளையாட நேரம் கிடைத்திருக்கிறதே, உனக்கு!''

''இப்போதும் ஆபீஸ் விஷயமாகத் தான் கூப்பிட்டேன் வேணு. சனிக்கிழமை இரவு கன்னிமராவில் ஒரு பார்ட்டி கொடுக்கிறேன். நீங்கள் அவசியம் வரவேண்டும்.''

''சரி வருகிறேன்; அப்புறம்?''

''அப்புறம் என்றால்?''

''நீ இதைச் சொல்ல என்னைக் கூப்பிடவில்லையே? சாரங்கன் செய்யவேண்டிய காரியமல்லவா இது? நீயே நேரில் என்னை அழைக்க வேண்டும் என்றாலும் நாளை டென்னிஸ் கோர்ட்டில் சந்திக்கும் போது சொல்லிக் கொள்ளலாமே!''

''யூ ஆர் ரைட் வேணு! நான் ஃபோன் செய்தது வேறு விஷயம். நேரில்தான் பேச வேண்டும். உங்களை இன்று சாயங்காலம் சந்திக்க முடியுமா நான்?''

''எப்போ வரட்டும்?''

''கன்ஸல்ட்டிங் அவர்ஸுக்குப் பிறகு போல் ஸ்டார் ரெஸ்டாரண்டுக்கு வருகிறீர்களா? அங்கே உங்களுக்காகக் காத்திருக்கிறேன்.''

''ரைட்டோ!'' என்றான் வேணுகோபால்.

ஏழு மணிக்கு மேல் வேணுகோபாலுடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருக்கலாம் என்பது நிச்சயமானதும், மேஜை மேல் இருந்த வேலைச் சுமை சாருலதாவுக்கு ஒரு பாரமாகவே தோன்றவில்லை.

அவள் அழைத்ததன் பேரில் அறைக்குள் நுழைந்த ஸ்டெனோ குமார், அவள் வாயிலிருந்து பிரவாகமாகப் பெருக்கெடுத்த சொற்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் திணறிப் போனான்.

(தொடரும்)

# ஞானேதேயம்

ஸ்ரீரங்கம் நரசிம்மன்

“அப்போ நீங்க போகப் போறதில்லையா?” என்று கேட்டுக் கொண்டே சங்கரலிங்கத்தின் அறைக்குள் வந்தாள் அவருடைய மனைவி மரகதம்.

“என்னை எங்கே போகச் சொல்றே?” என்று மனைவியை நிமிர்ந்து பார்த்தவாறு படித்துக் கொண்டிருந்த பத்திரிகையை மடித்து வைத்தார் சங்கரலிங்கம்.

“சின்னவர் வீட்டில் இன்று நிச்சயதாம்பூலம் இல்லையா?”

“மகா நிச்சயதாம்பூலம்! பெரிய ஜில்லா கலெக்டருக்குப் பெண்ணைக் கொடுக்கிறான்! இதுக்கு நான் வேறே போகணுமாக்கும்?” என்றார் சங்கரலிங்கம் வெகு அலட்சியமாக.

“என்ன இது எல்லாருமே கலெக்டருக்கும் கவர்னருக்கும் பெண்ணைக்கொடுக்க முடியுமா? ஏதோ அவர் தம் சக்திக்குத் தகுந்தாப்போல இடம் பார்த்திருக்காரு. நிச்சயதாம்பூலத்துக்கு நாம போகாம இருக்கலாமா? நாளைக்கு நம்ம வீட்டுக் கல்யாணத்துக்கு அவங்க வரணும்? மனசிலே ஆயிரம் மனஸ்தாபம் இருந்தாலும் சமயத்திலே விட்டுக் கொடுக்கலாமா?” என்றாள் மரகதம்.

“இதோ பாரு மரகதம்! வேணும்னா நீ போயிட்டு வா... நான் வரமாட்டேன்!” என்று தீர்மானமாகப் பதில் அளித்தார் சங்கரலிங்கம்.

சங்கரலிங்கத்தின் சித்தப்பா பிள்ளை தான் தணிகாசலம். சங்கரலிங்கத்துக்கு ஒன்று விட்ட தம்பி முறை. இரண்டு மைல்கள் தள்ளியிருந்த ராமநகரத்தில் இருந்தது அவர் வீடும் நிலபுலன்களும். தணிகாசலம் சங்கரலிங்கத்தைப் போல அவ்வளவு கொழுத்த பணக்காரர் இல்லையென்றாலும் நல்லவசதியுடனேயே இருந்தார்.



தணிகாசலத்துக்குச் சொந்தமான ஒரு துண்டு நிலம் சங்கரலிங்கத்தின் நிலத்துக்கு ஒட்டினாற்போலிருந்தது. அந்த நிலத்தைத் தனக்கு விற்றுவிடுமாறு தணிகாசலத்தைக் கேட்டார் சங்கரலிங்கம். அதை விற்பதாயிருந்தால் சங்கரலிங்கத்திற்கே கொடுப்பதாகவும், ஆனால் இப்போதைக்கு விற்கும் உத்தேசம் இல்லையென்றும் கூறிவிட்டார் தணிகாசலம். அதுதான் மனஸ்தாபத்துக்குக் காரணம்!

சங்கரலிங்கத்துக்கு ஒரு பெண்; தணிகாசலத்துக்கும் ஒரு பெண். தமது பெண்ணுக்கு டில்லியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒரு பையனை நிச்சயம் செய்திருந்தார் சங்கரலிங்கம். இன்னும் முகூர்த்த நாள் குறிப்பிடவில்லை. தணிகாசலத்தின் பெண்ணுக்கு அவ்வளவு சுலபமாகத் திருமணம் நடக்காது என்று சொல்லிக் கொண்டிருந்தார் சங்கரலிங்கம்.



இந்தப் படத்தை ஒரு ஜோக்காக மாற்ற என்ன செய்யலாம்? 49-ம் பக்கம் பார்க்க!

இப்பொழுது தணிகாசலத்தின் பெண்ணுடைய நிச்சயதாம்பூலத்துக்குத்தான் மரகதம் போயிருக்கிறாள்!

அன்று இரவு பத்து மணிக்கு மேல்தான் வீடு திரும்பினாள் மரகதம்.

"இருந்து கலியாணத்தையும் முடிச்சுட்டுத்தான் வருவியோன்னு நினைச்சேன்" என்றார் சங்கரலிங்கம்.

"என்னங்க செய்யறது? இருந்துட்டுத்தான் போகணும்னு உக்காத்தி வச்சுப்பிட்டாங்க... சின்னவருக்கு நீங்க வரல்லேயேன்னு குறையான குறை! அடுத்த மாசம் இருபத்திரண்டாம் தேதி முகூர்த்தம் வச்சிருக்காங்க!" என்று மரகதம் அங்கு நடந்தவைகளையெல்லாம் விவரிக்கத் தொடங்கினாள். எதையும் காது கொடுத்துக் கேட்கவில்லை சங்கரலிங்கம்.

மறு நாள் முதல் காரியமாகப் புரோகிதருக்குச் சொல்லி யனுப்பினார். அவர் வந்ததும், "நம்ம குழந்தைக்கு ஒரு முகூர்த்தப் பத்திரிகை எழுதுங்க... அடுத்த மாசம் இருபத்திரண்டாம் தேதி ஒரு முகூர்த்தம் இருக்காப்போல இருக்கு. அன்றைக்கே வச்சுடுங்க" என்றார். புரோகிதர் ஒரு நிமிஷம் தயங்கினார். இரண்டு குடும்பங்களுக்கும் அவர்தான் புரோகிதம். சின்னவர் வீட்டுக் கல்யாணம் அதே தேதியில்தான்! இதில் எந்த வருமானத்தை விடுவது என்று சிறிது யோசித்தார். பிறகு பஞ்சாங்கத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு, பையன், பெண் நட்சத்திரங்களைக் கேட்டார். சங்கரலிங்கம் கூறியதும், "பையனுக்கு ஜன்ம நட்சத்திரமாச்சே, வேறு முகூர்த்தம் பார்க்கட்டுமா?" என்றார்.

"வேண்டாம். அன்றைய முகூர்த்தமே இருக்கட்டும்" என்று உத்தரவிடுவதுபோல் கூறினார் சங்கரலிங்கம். புரோகிதர் மறு பேச்சுப் பேசாமல் அப்படியே எழுதிக் கொடுத்து விட்டுப் போய்விட்டார்.

இரண்டு தினங்கள் கழித்துத் தணிகாசலத்தை அழைத்து வருமாறு ஆள் அனுப்பினார் சங்கரலிங்கம். அவர் வந்ததும், "நிச்சயதாம்பூலம் ரொம்ப தடபுடலாமே?" என்றார். அவர் யதார்த்தமாகச் சொல்றாரா, கைத்தானமாகச் சொல்றாரா என்று தணிகாசலத்துக்குப் புரியவில்லை.

"நீங்கதான் திரும்பிப் பார்க்காம இருந்துட்டீங்க!" என்றார் தணிகாசலம்.

"நான் எப்படியப்பா வர முடியும்? அறுவடை ஆரம்பிச்சதிலேருந்து களைத்து மோடேகதியா யிருக்கேன். அப்படி இருக்கச்சியே என் கண்ணிலே மண்ணைத் தூவிட்டுறுங்க. அதுதான் உன் அண்ணி வந்திருந்துதே."

"அண்ணி எப்பவும் விட்டுக் கொடுக்க மாட்டாங்க."

"பாத்தியா? இந்த உடசலான பேச்சுத் தானே வேண்டாங்கறது?"

"அது போகட்டும். கல்யாணத்தையாவது முன்னின்று நடத்திக் கொடுங்க" என்றார் தணிகாசலம்.

"அதைச் சொல்லத்தான் உன்னைக் கூப்பிட்டேன். கல்யாணத்துக்கு நான் வரணுமில்லே?"

"என்னண்ணே அப்படிக் கேக்கறீங்க? நீங்கதானே எல்லாம்? பத்திரிகையிலேகூட உங்க பேரைத்தான் போட்டிருக்கேன்!"

"நல்லது. நான் அவசியம் வந்து நடத்திக் கொடுக்கறேன். ஆனா நீ ஒரு சின்னக் காரியம் செய்யணும்!" என்றார் சங்கரலிங்கம்.

"என்னண்ணே செய்யணும்? சொல்லுங்க!"

"கல்யாணத் தேதியை மாத்தி வைக்கணும். ஏன்னா, அந்தத் தேதியிலேதான் என் பெண்ணுக்கு முகூர்த்தம் வச்சிருக்காரு ஐயரு. அவள் ஜாதகப்படி அன்னிக்குத்தான் நாள் நல்லா யிருக்காம்!"

தணிகாசலத்துக்கு ஒரு நிமிஷம் என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. சங்கரலிங்கத்தின் சுபாவம் அவருக்கு நன்றாகத் தெரிந்ததுதான். வேண்டுமென்றே அந்தத் தேதியில் முகூர்த்தத்தை வைத்துக்கொண்டு வம்புக்கு இழுக்கிறார் என்பதை நொடிப் பொழுதில் புரிந்து கொண்டார்.

"என்ன சொல்றே?" என்றார் சங்கரலிங்கம்.

"பத்திரிகை யெல்லாம் அச்சாயிடுத்தே அண்ணே!..." என்றார் தணிகாசலம்.

"அதனாலென்ன? அந்தப் பத்திரிகைகளை யாருக்கும் அனுப்பாதே. இன்னொரு நாள் குறிச்சப்புறம் மறுபடியும் அச்சடிச்சாப் போறது. வேணும்னா அந்தச் செலவை நான் ஏத்துக்கறேம்ப்பா..." என்று மிகவும் அலட்சியமாகச் சொன்னார் சங்கரலிங்கம்.

"செலவுக்காக இல்லேண்ணே... என்ன இருந்தாலும் வச்ச முகூர்த்தத்தை மாத்

# தமிழ் நாடக மறுமலர்ச்சி விழா



திருவல்லிக்கேணி

## N. K. T. கலா மண்டபத்தில்

''நாடகமணி'' இலங்கேஸ்வரன் **மனோகர்** அளிக்கும்

நேஷனல் தியேட்டர்ஸ் **நாடக வார விழா**





*13-1-70 செவ்வாய் மாலை 6-30க்கு*

### இலங்கேஸ்வரன்

(துறையூர் மூர்த்தி எழுதியது)

*14-1-70 புதன் மாலை 6-30க்கு*

### மாலிக்காபூர்

(மதுரை திருமாறன் எழுதியது)

*15-1-70 வியாழன் மாலை 6-30க்கு*

### காடகமுத்தரையன்

(மதுரை திருமாறன் எழுதியது)





*16-1-70 வெள்ளி மாலை 6-30க்கு*
*17-1-70 சனிக்கிழமை ,,*

### சாணக்கிய சபதம்

(மதுரை திருமாறன் எழுதியது)

*18-1-70 ஞாயிறு மாலை 6-30க்கு*

### ஆட்சிப் பீடம்

(வித்வான் லட்சமணன் எழுதிய
புதிய நாடகம்)

*24-1-70 சனி மாலை 6-30க்கு*

### துரோணர்

(மதுரை திருமாறன் எழுதியது)

*25-1-70 ஞாயிறு மாலை 6-30க்கு*

### ஆட்சிப் பீடம்

---

சீசன் டிக்கட்டுகள்: (ரிசர்வ்டு) ரூ. 100/-, 50/-, 25/-
மற்றும் ரூ. 15/-, 10/-, 5/-

தினசரி டிக்கட்டுகள்: ரூ. 15/-, 10/-, 5/-, 3/-, 2/- & 1/-

கலா மண்டபத்தில் தினசரி மாலை 6 மணி முதல் 8-30 வரை
டிக்கட்டுகள் கிடைக்கும். போன்: 86336 & 83618

# துள்ளும் குழந்தைகள் நன்கு வளர்ந்திட
# ருசித்துப் பருகட்டும் போர்ன்விடா!

ஓடி விளையாடும் குழந்தைகளுக்கு தினசரி உணவிலிருந்து கிடைக்கும் சக்தி போதுவதில்லை. எவ்வளவு சீக்கிரம் அவர்களுக்கு சக்தி கிடைக்கிறதோ அதே வேகத்தில் அது பள்ளிக்கூடத்திலும், விளையாடும் போதும் செலவழிந்து விடுகிறது. இழக்கும் சக்தியை மீட்டுத் தந்து குழந்தைகளைத் துள்ளும் ஆரோக்கியத்துடன் வளர்க்க, தினமும் ஒரு கப் போர்ன்விடா கொடுங்கள். தம் மக்கள் நலம் கருதும் தாய்மார்கள் அனைவரும் இதை ஆமோதிப்பார்களே!

பால், சர்க்கரை, மால்ட், கோகோ இவையாவும் திட்டமாகக் கலக்கப்பட்டதும், போஷாக்குச் சத்து நிறைந்ததுமான ஒரு இனிய பானம் போர்ன்விடா. ஆம், இது ஒரு காட்பரீஸ் தயாரிப்பு!






**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரீஸ் போர்ன்விடா.**

Bensons 10391 TAM

தாது... அதோட வேறே முகூர்த்தமும் சமீபத்திலே இல்லே...''

''அப்புறம் உன் இஷ்டம். குழந்தைக்கு இப்பவே என் ஆசியைச் சொல்லிடறேன்'' என்றார் சங்கரலிங்கம்.




இரண்டு வீடுகளிலும் திருமண ஏற்பாடுகள் துரிதமாக நடந்து கொண்டிருந்தன. தணிகாசலத்தின் வீட்டுக் கல்யாணக் காரியங்களை உறவினர்களும், ஊர்க்காரர்களும் தங்கள் வீட்டு விசேஷமாக எண்ணி வலுவில் சென்று ஆளுக்கொரு வேலையாகப் பிரித்து கொண்டனர்.

இதில் இருந்த சங்கடமென்ன வென்றால் தணிகாசலத்தின் உறவினர்கள்தான் சங்கரலிங்கத்துக்கும் உறவுமுறை.

''என்னங்க இப்படி ஒரே நாளிலே முகூர்த்தத்தை வச்சிருக்கீங்களே... சொந்தக்காரங்க எந்தக் கல்யாணத்துக்கு வருவாங்க?'' என்று கேட்டாள் மரகதம். சங்கரலிங்கம் மௌனச் சிரித்து விட்டு, ''எந்த வீட்டுக் கல்யாணத்துக்குப் போனால் பெருமையாப் பேசிக்க முடியுமோ, அந்த வீட்டுக் கல்யாணத்துக்குப் போவாங்க'' என்றார்.

''அப்படீன்னு?''

''மரகதம்! நம்ம வீட்டுக் கல்யாணத்துலே வெற்றிலே பாக்குத் தேங்காய் கொடுக்கறதுக்குன்னு பிளாஸ்டிக் பைகளுக்கு ஆர்டர் கொடுத்திருக்கேன். ஒரு பையின் விலை ஒரு ரூபாய் ஆகுது. அந்தத் தாம்பூலப் பையை எடுத்துக்கிட்டுப் போறதே ஒரு கவுரவமா நினைப்பாங்க...'' என்றார் சங்கரலிங்கம் பெருமையாக.

இரண்டு தினங்கள் கழிந்தது. ''ஒரு ரூபா மதிப்புள்ள பையிலே தாம்பூலம் கொடுக்கப் போறதாச் சொன்னீங்களே... உங்க தம்பி கொடுக்கப் போற பை மட்டுமே இரண்டு ரூபாய்க்கு மேலே இருக்குமாம். ஒவ்வொரு பையிலும் ஒரு ரவிக்கைத் துண்டு வச்சுக் கொடுக்கப் போறாங்களாம்! சென்டு பூசின பையாம்!'' என்ற செய்தியைச் சொன்னாள் மரகதம்.

சங்கரலிங்கம் யோசனையில் ஆழ்ந்தார். ''என்னோடு போட்டி போடறானா? சரி! நம்ம வீட்டுக் கல்யாணத்துலே சொந்தக்காரங்களுக்கெல்லாம் புடவை வேஷ்டி வச்சுக் கொடுக்கறேன். கல்யாணத்துக்கு சினிமா ஸ்டார் நாட்டியம் ஏற்பாடு செய்துடறேன். இப்பவே இந்த விஷயத்தை நம்ம சொந்தக்காரங்களுக்கெல்லாம் தெரியப்படுத்தறேன். அப்புறம் பார்க்கலாமே சொந்தக்காரங்க எந்தப் பக்கம் சாயறாங்க என்பதை!'' என்றார் வீறாப்புடன்.

திருமணத் தேதிக்கு நான்கு தினங்களுக்கு முன்பே சங்கரலிங்கத்தின் வீடு திருவிழாக் கோலம் கொண்டு விட்டது. ஒரு மனுஷனுக்கு இவ்வளவு உறவினர்களா என்று வியக்கும் வண்ணம் ஏதேதோ உறவு முறைகள் சொல்லிக்கொண்டு ஜனங்கள் வந்த வண்ணமாயிருந்தனர். எல்லோரையும் மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்துக் கொண்டிருந்தார் சங்கரலிங்கம்.

தணிகாசலத்தின் வீட்டுத் திருமணத்துக்கு அவருடைய மனைவியின் வகை உறவினர் ஒருசிலர் மட்டும் வந்திருந்தனர்.

திருமணம் இருபத்திரண்டாம் தேதி. அதற்கு முதல் நாள் மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம். அந்தச் சுற்று வட்டாரத்தில் ஊர்வலத்துக்கென்றே உயிர் வாழ்ந்து கொண்டிருந்த ஐந்தாறு தகர டப்பா மோட்டார் கார்களையும் சங்கரலிங்கம் ஒரு வார காலத்துக்குத் தமக்கே பேசி அமர்த்திக் கொண்டார்.

திருமணத்துக்கு முதல் நாள் காலைதான் சங்கரலிங்கத்தின் மாப்பிள்ளைப் பையன் வர வேண்டும்.

காலையிலிருந்து மாலை வரை ஒவ்வொரு ரயிலுக்கும் தமது வில் வண்டியை ஸ்டேஷனுக்கு அனுப்பிக் கொண்டிருந்தார் சங்கரலிங்கம்.

மாப்பிள்ளைப் பையன் வரவில்லை!

மாலை ஆறு மணிக்குத்தான் விஷயம் தெரிந்தது. டில்லியிலிருந்து வரும் வண்டி ஆந்திராவில் ஏற்பட்ட வெள்ளத்தினால் இன்னும் இரண்டு நாளைக்கு வந்து சேராதென்று!

அந்த முகூர்த்தத்தில் திருமணம் நடக்காதென்பதை வந்திருந்த விருந்தினர்கள் புரிந்து கொண்டார்கள்.

விஷயம் தெரிந்த ஒரு மணி நேரத்துக்குள் ஒருவர் பின் ஒருவராக அவ்வளவு உறவினர்களும் மூட்டையைக் கட்டி விட்டனர். சிலர் சங்கரலிங்கத்திடம் சொல்லிக் கொண்டனர். சிலர் சொல்லாமலே புறப்பட்டனர்.

சங்கரலிங்கத்தின் வீட்டுத் திருமணம் நிற்கலாம். ஆனால் விருந்தினர்களுக்குக் கல்யாணச் சாப்பாடு இல்லாமல் போகலாமா? புடவை வேஷ்டி இல்லாவிட்டாலும் ரவிக்கைத் துண்டாவது கிடைக்கட்டுமென்று அவ்வளவு பேரும் தணிகாசலத்தின் வீட்டுக் கல்யாணத்துக்குப் படையெடுத்தனர். செல்வவர் வீட்டுத் திருமணம் ஜாம் ஜாம் என்று நடந்தது!

அடுத்த வாரம் வேறொரு முகூர்த்தத்தில் நடந்த சங்கரலிங்கத்தின் வீட்டுத் திருமணத்துக்கு வந்திருந்த முக்கிய உறவினர்கள் தணிகாசலமும் அவரது மனைவியும்தான்.

''நம்ம வீட்டுக் கல்யாணம் இவ்வளவு எளிமையாகவா நடக்கணும்?'' என்று அங்கலாய்த்தாள் மரகதம்.

'' அதுதான் நியாயமானது மரகதம்! மகாத்மா காந்தி எளிமையைத்தான் போதித்தார்!'' என்றார் சங்கரலிங்கம்.

அநேகமாக அந்த வார்த்தைகள் அவர் உள்ளத்திலிருந்துதான் வந்திருக்கும்!

சாதாரணமாக எல்லோரும் ஒருத்தனைப் பார்த்துப் பல்லைக் காட்டுவதென்றால் (1) அவன் பெரிய பணக்காரனாக இருக்க வேண்டும்; அல்லது (2) பல் டாக்டராக இருக்க வேண்டும்.

பலராமன் இதிலே இரண்டாவது வகையைச் சேர்ந்தவன். அவனுடைய தகப்பனார் பட்டாபி முன்யோசனையுடன் எடுத்துக் கொண்ட ஒரு முடிவின் விளைவாகவே அவன் பல் டாக்டராக உருவெடுக்க முடிந்தது.

"மாட்டுக்குப் பல்லைப் பிடித்துப் பார்த்தால் வயது தெரியும்; மனிதனுக்குப் பிடித்துப் பார்த்தால் பணம் தெரியுமடா !.... பேசாமல் பல்லைப் பிடி; பி. டி. எஸ்.ஸுக்குப் படி !" என்று உபதேசம் செய்தார் பெரியவர்.

அவரது அன்பான ஆலோசனையைப் புறக்கணிக்காமல் பலராமன் பல் டாக்டருக்குப் படித்தான். தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுகிறோம் என்பது மட்டுமல்ல; தன்னுடைய நீண்ட கால இலட்சியமும் இதனால் நிறைவேறுமே?.... சிறு வயதில் பம்பரச் சண்டையின் போதும், பலீஞ் சடுகுடுவின் போதும், பட்டம் விடுகிற போதும், 'அழுகுணி' அடித்த எத்தனை பேரைப் பார்த்து, "பல்லைத் தட்டிக் கையிலே கொடுத்து விடுவேன், ராஸ்கல்!" என்று மிரட்டியிருக்கிறான்? அப்போது செய்ய முடியாததை — செய்வதற்கு மற்றவர்களும் தன்னுடைய பூஞ்சை உடம்பும் அனுமதிக்காததை — இப்போது செய்யும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறதல்லவா ?

பலராமன் பரீட்சைகளில் பிரமாதமாகத் தேறினான். தேறிய சூட்டோடு வீட்டிலேயே 'கிளினிக்' ஒன்றையும் தொடங்கினான். அவன் பலகை மாட்டிய வேளையில் அவனுடைய ஜாதகத்தில் சுபகிரகங்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து கூட்டம் போட்ட வேளையாக இருந்ததால், 'கிளினிக்'கில் நாளுக்கு நாள் கும்பல் அதிகமாயிற்று. பல் நோய்க்காரர்கள் அத்தனைபேருக்கும் கைகளில் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கொறடாவை ஆயுதமாகத் தாங்கிய ஒரு நவீன தெய்வமாகவே அவன் காட்சியளிக்க ஆரம்பித்தான். பலராமன் பல்லை



மட்டும் பிடுங்கவில்லை; பணத்தையும் பிடுங்கினான். முன்னதைப் பிடுங்கியபோது இருந்த வலியைவிடப் பின்னதற்கு வலி அதிகமாக இருந்த போதிலும் அத்தனை பேரும் முகம் சுளிக்காமலும் முணுமுணுக்காமலும் பில்லைக் கொடுத்து விட்டுத் தாடையைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்குப் போனார்கள். அத்துடன் "அடாடாடாடா!... என்னமாகக் கொஞ்சம்கூட வலியில்லாமல் பல்லைப் பிடுங்குகிறான் மனுஷன்!...." என்று எல்லோரும் ஒட்டுமொத்தமாகச் சொல்லவும், பலராமன் என்கிற பெயருக்குக் 'கைராசி' என்ற மறு பெயரும் அவனுடைய தலையைச் சுற்றிப் புகழ் வட்டம் ஒன்றும் வந்துசேர்ந்தன. இதன்




விளைவாக, ஸ்கூட்டர் வைத்துக் கொண்டிருந்த பலராமன் கார் வாங்கினான். மின் விசிறியை அப்புறப்படுத்தி விட்டு 'ஏர் கண்டிஷனர்' வாங்கிப் போட்டான். இப்படி அவன் வாழ்க்கை வசதிகள் எல்லாவற்றையும் குறைவற அனுபவித்துக் கொண்டிருக்கும் கட்டத்திலேதான் ஒரு நாள் அவனுடைய தாயும் தந்தையும் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தார்கள்.

"பார்க்கலாம்" என்றான் பலராமன் அலட்சியமாக.

ஆனால் பெற்றவர்கள் பார்க்காமலா பேச்சை ஆரம்பித்திருக்கிறார்கள்? அவர்கள் கூறிய பெண்களை எல்லாம் பல் ஒன்றை மட்டும் வைத்தே ஒதுக்கித் தள்ளினான் பலராமன். "பெண்ணின் படம் என்னத்துக்கு சார்? அவள் பல்லை மட்டும் 'குளோஸ் அப்' எடுத்து அனுப்புங்கள் போதும்!" என்று பலராமன் தரப்புத் தரகர் தண்டபாணி பெண்ணைப் பெற்றவர்களிடம் சொன்னதன் பேரில் முல்லைச் சிரிப்பு முதல், நாள் பட்டு தமர்த்துப் போன முறுக்கைக் கடிப்பது வரையிலான பல்வேறு பல் — பாவங்கள் கொண்ட புகைப்படங்கள் வந்து குவிந்தன. ஒவ்வொன்றையும் கையிலே பூதக் கண்ணாடி ஒன்றை வைத்துக் கொண்டு ஆராய்ந்து பார்த்து ஒதுக்கித் தள்ளினான் பலராமன். 'எதற்கெடுத்தாலும் இந்தப் பிள்ளை இப்படியொரு விதண்டா வாதம் பண்ணினால் அப்புறம் போகிற கதி என்ன?' என்று அவன் பெற்றோர் மனவேதனை அடைந்தார்கள்.

பேஷன்டுகளையெல்லாம் டைபாஸ் பண்ணிவிட்டு ஒரு வழியாக ஆபீஸ் பையனை அழைப்பதற்கு மணிக் குமிழை அழுத்தினான் பலராமன். அடுத்த நிமிடம் அறையின் அரைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள் ஒரு பெண். மன்னிக்கவும்: ஓர் அழகி.

பலராமனுக்கு ஆச்சரியமான ஆச்சரியம், 'ஜோசப் எப்போது பெண்ணாக மாறினான்?' என்று. நன்றாக உற்றுப் பார்த்த பிறகேதான்

ஜோசப்பின் அவலட்சணம் இத்தனை அழகான ரதியாக உருவெடுத்திருக்க முடியாது என்று தோன்றவே, தன்னைக் காண வந்திருக்கும் நோயாளிகளில் ஒருத்தியே இவள் என்று முடிவு கட்டிக் கொண்டான். 'காத்துக் கிடந்த கூட்டத்தில் இந்த மின்னலை மட்டும் எப்படி மிஸ் பண்ணினேனோம்?' என்று யோசித்த படியே ''எஸ், என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்று கேட்டான் வழக்கமான மிடுக்குடன்.

''என் தாத்தாவுக்குப் பல்வலி...'' என்றாள் அழகி.

''தாத்தாவா?.... எங்கே அவர்?....''

''வெளியே உட்கார்ந்திருக்கிறார்....இதோ அழைத்து வருகிறேன்!....'' என்று போனவள் அரை நொடிக்கெல்லாம் ஒரு கிழவருடன் திரும்பி வந்தாள்.

மேல் பார்வையாகவே நடந்து வந்து நாற்காலியில் உட்கார்ந்தார் கிழவர்.

''வாயைத் திறவுங்கள், தாத்தா !.. என்றான் அவன் உரிமையுடன்.

''ஊஹூம்' என்று தலையை ஆட்டினார் கிழவர்.

''ஏன் மாட்டேன் என்கிறீர்கள் ?....''

'முடியவில்லையே?' என்று கையாலேயே சைகை காட்டினார் பெரியவர்.

''அவ்வளவு வலியா?....'' என்று வியந்தான் பலராமன்.

''வலி கிடக்கட்டும்; வாய் ஒட்டிக் கொண்டு விட்டிருக்கிறது அவருக்கு....!'' என்று விளக்கம் தந்தாள் அந்தப் பெண்.

''என்ன? என்ன? வாய் ஒட்டிக் கொண்டு விட்டதா ?.... ஏன்? எப்படி ?''

''தாத்தா தினமும் சூயிங்–கம் மெல்லுவார். நேற்றைக்குக் கணக்கு வழக்கில்லாமல் மென்றிருக்கிறார் போலிருக்கிறது. அத்தனை சூயிங்–கம்மும் கடைவாய்ப் பல்லிலே ஒட்டிக் கொண்டு, வாயைத் திறக்கவே முடியவில்லை. அவர்..... பட்டப் பட்டினி!....''

''உண்மையாகவா ?''

''நிஜமாகவா!....''

பலராமன் சற்று யோசித்தான். அவனுடைய ஐந்து வருட காலத் தொழில் அநுபவத்தில் இது ஒரு புதுமையான 'கேஸ்'. பல்லையும் பணத்தையும் பறிகொடுத்து விட்டு வாயைப் பிளந்து கொண்டே போனவர்களைத்தான் அவன் இது வரை பார்த்திருக்கிறானே தவிர, வாயை மூடிக் கொண்டிருக்கும் ஒருவரைக்கூடப் பார்த்தது கிடையாது அல்லவா? இப்போது இவரை வாயைத் திறக்கச் செய்ய வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும் ?

''தாத்தா!'' என்று அழைத்தான் மெள்ள. கிழவர் தலையாட்டினார்.

''இந்த வட்டாரத்திலே 'ரொம்பப் பொல்லாதவன்' என்று எனக்குப் பெயர்...''

'அப்படியா?' என்கிற பாவனையில் கிழவர் புருவங்களை உயர்த்தினார்.

''என்கிட்டே யாராக இருந்தாலும், 'அப்பாயின்ட் மென்ட்' வைத்துக் கொண்டு தான் வர வேண்டும். நீங்கள் என்னடா வென்றால் 'ராபணு' என்று வந்து நிற்கிறீர்கள்....''

தம் பேத்தியைச் சுட்டிக் காட்டினார் அவர். அவள்தான் அழைத்துக் கொண்டு வந்தாளாம்.

''தெரிகிறது..... இந்தப் பெண்தான் என் கழுத்தை அறுப்பதற்கென்று உங்களை இழுத்துக் கொண்டு வந்திருக்கிறாள்....'' இது மாதிரி வந்து நின்றால் எனக்குப் பொல்லாத கோபம் வரும். இப்போதும் அப்படி வந்திருக்கிறது. நான் என்ன செய்யப் போகிறேனென்றால் இந்தப் பெண்ணை ஓர் அறை அறையப் போறேன், கோட்டை அறையாக!'' என்றவன் முழுக் கைச் சட்டையை முழங்கைக்கு மேல் இழுத்து விட்டுக்கொண்டு அந்தப் பெண்ணை நெருங்கவும் —

''அடப்பாவி!... எதற்காகடா நீ எங்கள் கிரிஜாவை அறைவது? வைத்தியம் பண்ணிக் கொள்ள வந்தோமா, இல்லே உன்கிட்டே அறை வாங்க வந்தோமா ? அயோக்கியப் பயலே!'' என்று கூவினார் கிழவர் ஆத்திரம் தாங்காமல்.

கிரிஜா திகைக்க, கிழவர் துடிக்க, அவன் சிரித்தான். ''சபாஷ் ! கோபப்படாதீர்கள், தாத்தா !.... நீங்கள் வாயைத் திறக்க வேண்டும் என்பதற்காகவே சும்மாவாவது அப்படிச் சொன்னேனாக்கும்!....'' என்றான்.

அந்தப் பெண் கிரிஜா அவனை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தனது ஆயுதங்களை எடுத்துக் கொண்டு மளமள வென்று வேலையில் இறங்கினான். 'சூயிங்–கம்'மை வழித்தெறிந்தான். சினிமாவில் வரும் குரூப் – டான்ஸ் போலப் பக்கத்துக்கு நான்கு வீதம் ஆடிக் கொண்டிருந்த கடைவாய்ப் பற்களைத் தாட்சிண்யமின்றிப் பிடுங்கிக் 'கடாசி' யெறிந்தான்.

வோஷினில் கை கழுவியபடியே, ''இவருக்கு இனிமேல் எந்தப் பல்லும் பிரயோசனப்படாது.... எல்லாவற்றையும் எடுத்தாக வேண்டும்....'' என்றான் கிரிஜாவிடம்.

''அப்படியா?'' என்றவள், ''டென்ச்சர் வைத்துக் கொள்ளலாமா?'' என்று கேட்டாள்.

''அவருக்கு விரோதிகள் யாரேனும் உண்டா ?''

''கிடையாது !''

''கோபம் அடிக்கடி வருமோ ?''

''ஊஹூம் !''

''அப்படியானால் பொய்ப் பல் செட் எதற்கம்மா ? யாரைப் பார்த்து அல்லது எதைக் கண்டு இவர் இந்த வயதுக்கு மேல் பல்லைக் கடிக்கப் போகிறார் ? விட்டுத் தள்ளுங்கள், பேசாமல்!''

''அப்படிச் சொல்லி விடலாமா, டாக்டர்? 'பல் போனால் சொல் போச்சு' என் பார்களே!'' என்றார் கிழவர் குறுக்கே புகுந்து.

''சரி, அந்த விஷயத்தை அப்புறம் கவனிப்போம்.... ஒன்றுவிட்டு ஒரு நாள் வந்து இரண்டிரண்டு பல்லாக எடுத்துக் கொண்டு போங்கள்!'' என்று சொல்லி அனுப்பி வைத்தான் அவர்களை.

கிரிஜா அந்த அறையை விட்டுப் போகும் போது ஒரு முறை திரும்பி அவனை நோக்கிப் புன்முறுவல் ஒன்றைத் தவழ விட்டாள். வேறு எவனுமாக இருந்தால், 'ஆகா ! என்ன வெள்ளைச் சிரிப்பு!' என்று உருகிக்

கரைந்து போயிருப்பான். பலராமனோ, "ஆகா! என்ன அழகான பல் வரிசை! எத்தனை வெண்மையான பற்கள்!" என்று எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தான்.

**அ**வன் குறிப்பிட்ட தவணைப்படியே இழவரும் கிரிஜாவும் வந்தார்கள். இழவரு டைய ஒவ்வொரு 'விஸிட்'டின் போதும் இரண்டு பற்கள் நஷ்டமாகிக் கொண்டிருந்தன. பலராமனுக்கோ இருபது ரூபாய் லாபமாகிக் கொண்டிருந்தது. கிரிஜாவும் அவளது புன்னகையும் பல் வரிசையும் அவன் மனத்திலே ஒரு மூலையாகப் பார்த்து இடம் பிடித்துக் கொள்ள ஆரம்பித்து, கடைசியில் சில சண்டிக்கார ரயில் பிரயாணிகளைப் போல் இதயம் மொத்தத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டதால் பலராமனின் பாடு திண்டாட்டமாகப் போய் விட்டது.

கிரிஜாவின் தாத்தாவுக்குக் கடைசியாக எஞ்சி நின்ற பல்லை இழுத்தெறிந்த அன்றைக்குப் பலராமனின் மனம் பட்ட வேதனையை எழுத்தில் வர்ணிக்க முடியாது. இழவர் பொய்ப் பல் செட்டுக்காக ஆசைப்பட்டார் என்பதற்காக அளவெடுக்கிறேன் பேர் வழி என்று ஒவ்வொரு பக்கத்துக்கும் ஒவ்வொரு வரிசைக்குமென நான்கு நாட்கள் போலத் தொடர்ந்து வரச் சொன்னான். அப்புறம் செட்டைப் பொருத்திப் பார்க்க ஒரு நாள் ஆயிற்று; இனி என்ன செய்வது?

அன்று கிரிஜா அவனிடம் விடை பெற்றுக் கொண்ட காட்சி, ரவி வர்மாவின் சகுந்தலை படத்தை நினைவுபடுத்தியது அவனுக்கு. அவள் காலில் முள் தைத்த சாக்கில் துஷ்யந்தனைத் திரும்பிப் பார்த்தாள். இவளோ ஸ்லிப்பரை மறந்து விட்டதாகச் சொல்லி அல்லவா வேண்டுமென்றே அவன் அறைக்குள் மறுபடியும் நுழைந்தாள். "ஐயோ! ஐயோ! என்ன அழகு. என்ன சிரிப்பு, என்ன பல் வரிசை! கொலைக் கேஸ்!"

அவனுக்குத் துக்கமான துக்கம்; வருத்தமான வருத்தம். தன்னுடைய உயிர்த் தோழனை கூழல் நாற்காலியைக் கட்டிக் கொண்டு ஒரு குரல் அழ வேண்டும் போல் இருந்தது.

* * *

**அ**ன்றிரவு. "அம்மா! உன்னிடம் ஒரு விஷயம் பேச வேண்டுமே!..." என்றான் தன் தாயிடம்.

"என்னடா, ராஜா?"

"இந்த வீட்டுக்கு ஒரு மருமகள் வர வேண்டும் என்று நீ ரொம்ப நாட்களாகச் சொல்லிக் கொண்டிருந்தாயல்லவா?"

"ஆமாம். இப்போதும்தான் சொல்கிறேன்."

"கவலையை விடு!.... உனக்கு மருமகள் வருகிற காலம் வந்து விட்டதம்மா!"

"என்னடா சொல்றே நீ?"

பலராமன் நாணவுமில்லை; கோணவும் இல்லை. பட்டென்று விஷயத்தைச் சொல்லி முடித்தான்.

"இங்கே அந்தப் பெண் வந்திருந்ததா, என்ன? நீ என்னைக் கூப்பிட்டுக் காண்பிக்கிறது தானே?" என்ற அன்னை, "உன் அப்பா



## எலி ஜோசியம்

கிளி ஜோசியம், குருவி ஜோசியம் பார்த்திருப்பீர்கள். மதுரையில் சிலர் எலியைக் கொண்டு சீட்டை எடுக்க வைத்து ஜோசியம் பார்க்கிறார்கள். பத்துப் பைசா கீழே எடுத்து வைத்தால்தான் ஜோசியச் சீட்டை எடுக்கிறது எலி. காசு இல்லாமல் எடுக்கச் சொன்னால் வணக்கம் என்ற அட்டையை அது எடுத்துக் கொடுக்கிறது! - பெ. இராமச்சந்திரன்

---

வரட்டும். விசாரிக்கச் சொல்கிறேன்!...." என்று கிரிஜாவின் வீட்டு முகவரியைக் கேட்டு வைத்துக் கொண்டாள்.

பட்டாபி வீடு திரும்பியவுடனேயே பலராமனின் தாய் விஷயத்தை அவரிடம் தெரிவித்தாள். "பரவாயில்லையே பயல்...? தானாகவே தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டானே!" என்ற பட்டாபி ஒரு நிமிடம் நிதானித்தார். பிறகு, "எனக்கென்னவோ வரப் போகிற பெண் அவ்வளவு அழகாக இருக்கும் என்று தோன்றவில்லை!" என்றார்.

"எதனால் அப்படிச் சொல்கிறீர்களாம்?"

"உன் பையன் பல்லைப் பார்த்துத்தான் அவளைத் தேர்ந்தெடுத்திருப்பான்...முகத்தை எங்கே பார்த்திருக்கப் போகிறான்? என்ன அவலட்சணமோ, என்ன கண்றாவியோ?"

"எதுவாக இருந்தால் நமக்கென்ன? ஆயுசு பூராவும் அவன்தானே அவளைப் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறான்? முகமோ, பல்லோ — எது பிடிக்கிறதோ அதைப் பார்த்துக் கொண்டிருக்கட்டுமே! ராஜா மெச்சினவள் ரம்பை!...." என்று முடித்தாள் அவன் அன்னை.

ஆனாலும் கிரிஜாவைப் பார்த்து விட்டு வந்த பிறகு அவளும் சரி, பட்டாபியும் சரி, தங்கள் பிள்ளை நல்லதொரு அழகியையே தேர்ந்தெடுத்திருப்பதாகச் சொல்லிச் சந்தோஷப்பட்டுக் கொண்டார்கள். கல்யாணப் பேச்சு வார்த்தைகளில் இறங்குவதற்கு முன் பலராமனை அழைத்து, "உனக்குச் சம்மதம் தானேடா?.... அப்புறம் எதையாவது சொல்லிப் பின்னுக்கு வாங்கப் போகிறாய்?" என்று முன் எச்சரிக்கையாகக் கேட்டுக் கொண்டார் பட்டாபி.

"சம்மதம் இல்லாமலா உங்களைப் போய்ப் பார்த்து விட்டு வரச் சொன்னேன்?"

"உன் பல் டெஸ்டிலும் அவள் பாஸ் தானே?...."

"ஓ, எஸ்!...."

"எனக்கு ஒரு சந்தேகம். அவளுடைய பல் எல்லாம் நிஜப் பல்தானா? இல்லை, பல் செட் ஏதாவது வைத்துக் கொண்டிருக்கப் போகிறாள், உஷார்!.... ஏன் சொல்கிறேனென்றால் அத்தனை அழகாகவும் வரிசையாகவும் இயற்கையாகவே இருக்குமா என்று எனக்குச் சந்தேகம்....."

பலராமனுக்குப் பகீரென்றது. அவனுக்கு இது வரை தோன்றாத சந்தேகம் இது. ஆனால் இதைப் போய் எப்படித் தீர்த்துக் கொள்

வது....? தாயாரிடம் தன் கவலையைத் தெரிவித்தான். ''இதென்ன பிரமாதம்? வருகிற வெள்ளிக்கிழமையன்று நம்ம வீட்டுக்கு அந்தப் பெண்ணை வரச் சொல்லுவோம். அவளுக்குத் தெரியாமல் நாமே பரீட்சை பண்ணிப் பார்த்து விட்டால் போகிறது!'' என்று தைரியம் சொன்னாள் அம்மா.

அதன்படியே கிரிஜாவும் அவள் தாயும் வெள்ளிக்கிழமையன்று பலராமனின் வீட்டுக்கு வந்தார்கள். பலராமனுக்கு என்னவோ தன்னுடைய வருங்கால மனைவியைத் தன் கற்பக விருட்சத்தில் உட்கார்த்தி வைத்துப் பல்லைப் பிடித்துப் பார்த்துவிட வேண்டுமென்று கொள்ளை ஆசைதான். ஆனால் அதற்கு இடம் கொடுக்காதபடி பெரியவர்கள் குறுக்கே நின்றார்களே!

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுக் கிரிஜாவும் அவளுடைய தாயும் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் படி இறங்கியதுதான் தாமதம், ''என்னம்மா ஆயிற்று?'' என்று ஆவலுடன் கேட்டான் அன்னையிடம்.

''பயப்படுவதற்கு ஒன்றுமில்லையடா.... அத்தனையும் நிஜப் பல்தான்!....''

''எப்படிக் கண்டு பிடித்தாயாம்?....''

''இன்றைக்குத் தவலை அடை டிபன் பண்ணியிருந்தேன் அல்லவா? அதைக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னேன்....''

அது போதும் அவனுக்கு. அவன் அம்மா பண்ணுகிற தவலை அடையை டில்லி எருமை மீது விட்டெறிந்தால் அது சுருண்டு விழும். விஷயம் அப்படி இருக்கும் போது பொய்ப் பல் தப்பிக்க முடியுமா, என்ன?

பெரியோர்கள் நிச்சயித்தபடி கிரிஜா — பல்ராமன் (அழைப்பிதழ் அச்சடித்தவர் அப்படித்தான் போட்டிருந்தார்!) திருமணம் ஜாம் ஜாமென்று நடந்தேறியது. திருமணத்துக்குப் பிறகு தேன் நிலவுக்குத் தன் காரிலேயே ஊட்டிக்குப் போனான் பலராமன். அது டிசம்பர் மாதமாகையால் குளிர் ஊட்டியையே நடுங்க வைத்துக் கொண்டிருந்தது. குளிரும் கதகதப்பும் இணைந்த ஒரு சூழலில் தன்னை மறந்திருந்தான் பலராமன்.

ஒரு நாள் ஹோட்டல் அறையில் 'ரூம்—ஹீட்ட'ருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டே, ''குளிர் எப்படி இருக்கிறது, கிரி? பல் கிட்டிப் போகும்படியாக இல்லை....? தந்தி அடிக்கிற மாதிரி ஓர் உணர்வு ஏற்பட வில்லை?....'' என்று கேட்டான் பலராமன்.

''குளிர்கிறது.... ஆனால் நீங்கள் சொல்கிறபடி பல் கிட்டவுமில்லை; தந்தி அடிக்கவும் இல்லை என்கிறேன்!....'' என்றவள் அடுத்தபடி அவன் மெய் சிலிர்க்கும்படியான — ரத்தம் உறையும் படியான — காரியம் ஒன்றைச் செய்தாள். (நகைச்சுவைக் கதையில் பயங்கரம் வராது என்று சொல்கிறவர்கள் கவனிக்க:) கிரிஜா தன் வாய்க்குள் கைவிட்டுத் தன் பற்களை அநாயாசமாகக் கழற்றி அலட்சியமாக மேஜை மீது வைத்தாள்!

''ஆ!'' என்று அலறினான் பலராமன். 'மோசம் போனேன் கோபாலா!' என்று அவன் அந்தராத்மா அலறியது. ''இஇஇ... இது... எஎஎ....என்ன.... புபுபு.... புதுவிவிவி... விதமான... மோமோமோ.... மோசடியாக இருக்கிறதே!'' என்று நடுங்கிக் கொண்டே கேட்டான்.

''மோசடியாவது ஒன்றாவது? இப்போது தான் புதுசாகப் பல் வைத்துக் கொண்டேன்!....'' என்றாள் கிரிஜா நிதானமாக.

'' 'இப்போதுதான்' என்றால்?....''

''அதாவது அன்றைக்கொரு நாள் உங்கள் வீட்டுக்கு அம்மாவுடன் வந்து விட்டுப் போனேனில்லையா?.... வீட்டுக்கு வந்ததும் பல்வலி பொறுக்க முடியவில்லை. உங்களிடமே ஓடி வந்து விடலாமா என்றுகூடப் பார்த்தேன்......''

''வருவதற்கென்னவாம்?''

''என் அப்பா — அம்மாதான் தடுத்துவிட்டார்கள்; 'நன்றாயிருக்கிறதடி, நாளையென்றால் நாளை கல்யாணம் நடக்கப் போகிறது. இப்போது பிடித்தே போய் அவர்களிடம் பல்லைக் காட்டிக் கொண்டிருப்பதாவது?' என்று சொல்லி.... அப்புறம்தான் மவுண்ட் ரோடிலே சிஸ் — பிஸ் — ஜா என்று சீருக்காரர் ஒருத்தர் இருக்கிறாரே, அவரிடம் போனேன்.... எல்லாப் பல்லையும் எடுத்து விட்டு 'டென்ச்சர்' வைத்துக் கொடுத்தார்.

கிரிஜா முடிக்கவும் பலராமனின் மனத்துக்குள் ஆயிரம்வொல்கனோக்கள் (எரிமலைகள்) வெடிக்கவும் சரியாக இருந்தது. கடைசியில் அவனுடைய பரீட்சையே அல்லவா அவனைக் கவிழ்த்து விட்டது!

இந்த மன உளைச்சலுடனேயே மறு நாள் மலைப்பாதை வழியே அவன் காரை ஓட்டிக் கொண்டு கீழே வந்தபோது எதிரே வந்த ஒரு லாரிக்கு வழி விடுவதற்காக ஒதுங்கவும், அவனுடைய கார் அந்தக் குறுகலான மலைச் சாலையில் இடமின்றிக் குப்புற விழுந்தது. நல்ல வேளையாகப் பெரிய சரிவில் விழாமல் பதினைந்தடிப் பள்ளத்தில் விழுந்து வைத்தது. அந்த அதிர்ச்சியில் அப்படியே மயக்கமாகிவிட்டான் பலராமன்.

கோயமுத்தூர் மருத்துவ மனையில் மறு நாள் காலை கண் விழித்த அவனைப் பரிசோதித்த டாக்டர், ''நல்ல வேளையாகத் தப்பிப் பிழைத்தீர்களே மிஸ்டர்!.... அதற்காக ஆண்டவனுக்கு நன்றி செலுத்துங்கள்!'' என்றார் ஆறுதலாக.

''ஆண்டவனே!....'' என்ற பலராமன் ஓர் அதிசயமான உணர்வுக்கு உள்ளானான். திடீரென்று வாய் சப்பையாகி விட்டது போலிருந்தது. கன்னத்தில் விரலை வைத்தான். பூரி போல் உள் பக்கம் அமுங்கியது கன்னம்!

டாக்டர் மெள்ளச் சிரித்தார். ''கவலைப் படாதீர்கள்.... விபத்தில் உங்கள் முன் வரிசைப் பல் பூராவும் கொட்டி விட்டது... மீதியை நாங்கள் எடுத்து விட்டோம்..... 'டென்ச்சர்' வைத்துக் கொள்ளலாம், நாளைக்கே!....'' என்றார் நிதானமாக. இருபது பவுண்டு கனமுள்ள இரும்புச் சுத்தியால் மண்டையில் போட்டது போல் இருந்தது பலராமனுக்கு.

பலராமன் இப்போது 'பாலராமன்' என்று தன் பெயரை மாற்றி வைத்துக் கொண்டு விட்டதாகக் கேள்வி!

# இந்தியாவின் ரேடியோக்கள் மற்றும் டிரான்ஸிஸ்டர்கள் தொழிலிலேயே அதிகமாக ஏற்றுமதிசெய்யும் மர்பி அளிக்கும்...



மினி மாஸ்டர் 4
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 220.00*



மினி பாய் 2
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 175.00*

நம்நாட்டிலும்,
வெளிநாட்டிலும்
டிரான்ஸிஸ்டர்களில்
அதிகமாக விரும்பி
வரவேற்கப்படுவது !



ம்யூஸிஷியன்
மீடியம் வேவ்
ரூ. 125.00*



டுமாபிர்
3 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 283.00*

சில டிரான்ஸிஸ்டர்களே நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு சிறந்த பலனை அளிக்கிறது-கஷ்டத்தை குறைப்பது !

இதனாலேயே, இந்நாட்களில் மேலும் மேலும் அதிகமான ஜனங்கள் மர்பியையே விரும்பி வாங்குகிறார்கள். உண்மையாக 60,000 த்திற்கு மேற்பட்ட மர்பி-இந்தியா ரேடியோக்களும், அதன் கருவிகளும், சென்ற வருடம் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன-மேலும் , 70,000த்திற்கு மேற்பட்ட ஆர்டர்கள் கைவசமுள்ளன.

இதை நீங்கள் படிக்கும்போதே, அண்மையில் தானாவில் துவக்கப்பட்ட மர்பியின் தொழிற்சாலையில் மேன் மேலும் தரமான டிரான்ஸிஸ்டர்கள் உற்பத்தியை பெருக்கத் துவங்கி விட்டது.

ஆனால், இதன் தன்மையை மதிப்பிடுவதை உங்களிடமே விட்டு விடுகிறோம். அண்மையிலுள்ள விற்பனையாளர்களிடம் சென்று இதன் ஆனிஷனை தரத்தை ஒத்திட்டு பாருங்கள். பிறகு உண்மையான தரமான செட்டிலிருந்து கிடைக்கும் பேரானந்தத்தை உணர்வீர்கள் !

*விலை: சுங்க வரி உள்பட - இதர வரிகள் தனி



**மர்பி இல்லத்தை மகிழ்விக்கிறது !**

**சாய்நாத் – கௌசல்யா**

மாம்பலம் கண் டாக்டர் ஸ்ரீ T. S. துரைஸ்வாமி அய்யரின் சகோதரன் காலஞ்சென்ற T. S. குப்புஸ்வாமி அய்யரின் புதல்வன் **ஸ்ரீ T. K. சாய்நாத்**திற்கும் மார்க்கெட்டிங் அட்வர்டைஸிங் அஸோஸியேட்ஸ் பிரைவேட் லிட். டைரக்டர் ஸ்ரீ P. சந்திரசேகரன் புதல்வி சௌ. **கௌசல்யா**விற்கும் சென்னை 'சுகன் விஹாரில்' சமீபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்

மணமகன் : **சிரஞ்சீவி ராதாகிருஷ்ணன்**
மணமகள் : சௌபாக்கியவதி **சுந்தரி**

ஜோதிஷமார்த்தாண்ட K. S. கிருஷ்ண மூர்த்தியின் குமாரத்தி சௌ. **சுந்தரி**க்கும் (காலஞ்சென்ற) எஸ். சத்யமூர்த்தியின் **குமாரன்** சிரஞ்சீவி **எஸ். ராதா கிருஷ்ண**னுக்கும் சமீபத்தில் திருச்சானூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள் !

எங்கள் அங்கீகாரம் பெற்ற சந்தா வசூலிப்பவரிடம், உள்ளூர் அங்கத்தினர்கள் நேரிடையாக சந்தா செலுத்தலாம். வெளியூர் சேமிப்புச் சீட்டுகள் M. O. மூலம் சேர்த்துக் கொள்ளப்படும்.

# ஓடு! ஓடு!!




சென்னையில் மட்டும் ஒரு கல்லூரியில் இடம் கிடைத்து விட்டால்...!

தினம் ஏதாவது ஒரு ஹோட்டலுக்குப் போய் வாய் இனிக்க நல்ல சிற்றுண்டிகளை 'ஒரு கை' பார்க்கலாம். வாரம் ஒரு படம் பார்க்கலாம். கடற் கரைப் பக்கம் போக லாம். சைனா பஜார் சென்று ஜனக்கூட்டத்தில் நெருக்கித் தள்ளிக் கொண்டு பாரி முனை வரை யில் சென்று திரும்பலாம். சென்னையில் உள்ள 'ஏர் கண்டிஷண்டு' தியேட்டர்களையும், 'வயதுவந்தவர்கள் மட்டும்' பார்க்கக் கூடிய படங்களைப் பற்றியும் நினைத்தபோதே அவ னுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

சங்கரனின் தகப்பனார் செய்த அரும் பெரும் முயற்சிகளின் பயனாக அவன் விரும் பிய கல்லூரியிலேயே அவனுக்கு இடம் கிடை த்தது. திருச்சி மாவட்டத்தில் ஒரு ஒதுக்குப் புறமான கிராமத்தில் இருந்து கொண்டு உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண் டிருந்த சங்கரனின் நெடு நாளையக் கனவு நனவாகி விட்டது. அவன் தகப்பனார் சங்கர னைச் சென்னை திருவல்லிக்கேணியில் உள்ள நண்பர் வீட்டில் தங்கச் செய்தார். அவர்கள் வீட்டில் இருந்த தனி அறை அவனுக்கு மிக வும் சௌகரியமாக இருந்தது. சாப்பாடு அவர்கள் வீட்டில். கொஞ்சம் கொஞ்சமாக அவனுக்கு நண்பர்கள் பலர் கிடைத்தனர். பசையுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவன்; தேவையான போதெல்லாம் அப்பாவிட மிருந்து பணம் வந்து கொண்டிருந்தது; சங்கரன் செலவு செய்வதில் மிகவும் தாராள மாக இருந்தான். ஆகவே நண்பர்களும் அவ னுக்குத் தாராளமாக மட்டும் அல்ல, ஏராள மாகவும் கிடைத்தனர்.

ஆக, 'சங்கரனின் வாழ்க்கை மிகவும் சந் தோஷமாகச் சென்று கொண்டிருந்தது. ஆனால் இந்த ஆனந்தம் நீடிக்கவில்லை.

அவன் பி. யூ. ஸி.யில் தவற நேர்ந்ததும் அவன் தகப்பனார் அவனைக் கடுமையாகக் கோபித்துக் கொண்டதோடு' அவன் படிப் பையே அத்துடன் நிறுத்தி விடுவதாகவும் கூறிவிட்டார். சங்கரன் அப்பாவின் காலில் விழாக் குறையாகக் கெஞ்சிக் கூத்தாடி மீண்டும் சென்னை வந்து சேர்ந்தான். அவன் பரீட்சையில் தவறிப் போனதற்குக் காரணம் அவனைப் பரிவாரமாகச் சூழ்ந்து கொண்டு படிக்கவொட்டாமல் அடித்த நண்பர்களின் தொந்தரவுதான். இவன் ஊரிலிருந்து திரும்பி வந்துவிட்ட சமாசாரம் நண்பர் களுக்குத் தெரியாது. எப்படியும் தெரிந்து விடும். தெரிந்துவிட்டால் இவன் படித்துக் கிழித்த மாதிரிதான். கிராமத்தில் இருந் தால் மீண்டும் படித்துப் பரீட்சை எழுத முடியாது என்று இங்கு வந்தான். இங்கு வந்தும் படிக்க முடியவில்லை யென்றால் அப்புறம் பரீட்சையில் தேறுவது எப்படி? மீண்டும் பரீட்சையில் 'பெயில்' ஆகிவிட் டால்...? இதை நினைக்கவே சங்கரன் உடம்பு நடுங்கியது. அப்படி நேர்ந்து விட் டால் அப்பாவைச் சந்திக்கவே முடியாது. எங்கேயாவது ஊரை விட்டே ஓடிவிட வேண் டியதுதான். கடைசி வாக்கியத்தைச் சங் கரன் தன்னை மறந்த நிலையில் சற்று உரக் கவே சொல்லி விட்டான். அந்த வீட்டுக்குச் சொந்தக்காரரான அப்பாவின் நண்பர் பெரி யவர் திடீரென்று அவன் முன் தோன்றி "அப்படியெல்லாம் எதுவும் செய்துவிடாதே! உன் நண்பர்களின் தொல்லையிலிருந்து விடு பட நான் உனக்கு ஒரு யோசனை சொல்லித் தருகிறேன். அதன்படி நடந்தாயானால், உன் நண்பர்களில் ஒருவன் கூட உன்னைத் தேடிக் கொண்டு இங்கே வரமாட்டான்!" என்றார்.

வெகு நேரமாக அவர் தன், எதிரிலேயே நின்று கொண்டிருந்திருக்கிறார் என்பது இப் பொழுதுதான் அவனுக்குத் தெரிந்தது. "சொல்லுங்கள் மாமா, சொல்லுங்கள்!" என்று சங்கரன் துடியாய்த் துடித்தான். நண்பர் அவன் காதோடு ஏதோ ரகசிய மாகச் சொன்னார். சங்கரன் முகம் பிரகாச மடைந்தது.

சுமார் ஒரு வாரம், பத்து நாட்கள் வரை யில் அவன் நண்பர்கள் கூட்டம் வெல்லத்தை மொய்க்கும் ஈக்களைப் போல் அவனையே சூழ்ந்து கொண்டிருந்தது. அப்புறம் கூட் டமே இல்லை. இரவுக் காட்சி முடிந்த தியேட் டரைப் போலவும், திருநாள் முடிந்த ஆலயம் போலவும், வார விடுமுறை கொண்டாடும் பிரபல ஹோட்டலைப் போலவும் அவன் அறை நிர்மானுஷ்யமாக, நிசப்தமாகக் காட்சி யளித்தது. அவன் ஒழுங்காகப் படித்துப் பரீட்சையில் தேறினான் என்று சொல்லித் தான் ஆகவேண்டுமா?

பெரியவர் சொன்ன யோசனை என்ன? 'நண்பர்களுக்கெல்லாம் ஆளுக்குக் கொஞ்சம் கடன் கொடு. ஒரு மாதத் தவணையில் திருப்பித் தந்தால் போதும் என்று சொல்லு. முன்பு செய்தது போல எல்லா ருடைய செலவையும் நீயே ஏற்றுக்கொள் ளாதே! அதற்குப் பதில் கடன் தந்து அதைக் கண்டிப்பாகத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்றும் சொல்லிவிடு' என்பதுதான்!

சிகிச்சைக்கு முன்



26 - 10 - 66

சிகிச்சைக்குப் பின்



25 - 5 - 67

## திரு C. திருஞானசம்பந்தம்

(வயது 20)

3-வது ஆண்டு மாணவர்
ஸ்டேன்லி மெடிகல் காலேஜ்
சென்னை

2 வயது குழந்தையாக இருக்கும் பொழுது காய்ச்சல் வந்து இளம் பிள்ளை வாதம் (POLIOMYLITER) வந்து கோவை, தெலுங்குபாளையம் ஆஸ்பத்திரி டாக்டர் V. அர்ஜுனன் அவர்களால் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட மருந்தை உபயோகித்து அறுவை சிகிச்சை எதுவும் இல்லாமல் நல்ல பலமுடன் பூரண குணமாகி இருப்பதைக் காணலாம். சிகிச்சையின்போது வயது 20.

OSR

---

இந்திரா பார்த்தசாரதி எழுதும்

# சுதந்திர பூமி

சுவையான, புதிதான தொடர் நாவல்

# கணையாழி

ஜனவரி இதழில் ஆரம்பமாகிறது

-மற்றும்

சுஜாதா, தி. கஸ்தூரிரங்கன்
கே. ஸ்ரீனிவாசன், தி.ஜானகிராமன்
கே. எஸ். ஸ்ரீனிவாசன், சம்பத் -
இவர்களுடைய கதை, கட்டுரை
களைத் தொடர்ந்து படிக்க,

கணையாழி சந்தாதாரராகச் சேருங்கள்

தனிப் பிரதி 40 காசு

ஆண்டு சந்தா ரூ. 4.80

கணையாழி

A-134, Defence Colony, New Delhi-3

---



மதுரை ஸ்ரீ கே. எஸ். கோபால கிருஷ்ணன் (Banker) அவர்கள் குமாரத்தி சௌ. விஜயாவுக்கும் மதுரை சிபா ஸ்தாபனத்தைச் சார்ந்த திரு பரமேஸ்வருக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



# அர்ச்சனை

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

படம் முடிந்து விளக்குகள் கண் சிமிட்டி ஏற்றிக் கொள்ளத் தொடங்கின. பாட்டின் பின்னணியுடன் திரை மேல் வர்ணப் படுதா அலை அலையாய் இறங்க ஆரம்பித்தது. பத்மா எழுந்து நின்றாள். கண்ணனின் கை விரல்கள் அவள் கை மேல் பக்குவமாய்ப் பொத்திக் கொண்டன.

கூட்டத்துக்கு நடுவே, இலேசாய் ஒதுங்கி வந்து காரில் ஏறிக் கொள்ள ஐந்து நிமிஷங்களுக்கு மேல் ஆகியிருக்கும். வெளியே குளிர் சாதனம் செய்த ஹாலில் அடுத்த காட்சிக்காக டிக்கட் வாங்கக் காத்திருந்த கூட்டம் பாம்பு நெளிவாய் அலை ஒதுங்கிற்று.

கார் கிளம்பி விட்டது. இயந்திர முனகலின் தேயாத மாறாத ஓசை. பத்மா தன் மடி மீது கைக் குட்டையை நாலெட்டாக மடித்துப் போட்டுக் கொண்டே சொன்னாள்.

“ராக் ஹட்ஸனின் படம் என்றால் எனக்கு எப்போதுமே ரொம்பப் பிடிக்கும். எவ்வளவு இயல்பாக நடிக்கிறார்? ‘போனை’க் கையில் எடுத்தாலும், சிகரெட்டின் நுனியைத் தட்டினாலும், குழந்தையைக் கையில் எடுத்து விளையாடினாலும் எத்தனை லாகவமாக அவரால் உணர்ச்சிகளை வெளிக் காட்ட முடிகிறது?”

கண்ணன் பதில் சொல்லவில்லை. ஏதோ ஒரு திருப்பியின் இணைப்பில் ஒளியேறி நின்ற அவள் முகத்தைப் பார்த்துவிட்டு, மௌனமாகக் காரை மேலே ஓட்டினான்.

“என்ன பதிலே பேசவில்லை?” என்று அவனைச் சீண்டினாள் பத்மா.

கண்ணனால் பதில் சொல்ல முடியவில்லை தான். அடுத்த பையனை ஆசிரியர் பாராட்டக் கேட்டு நிற்கும் மாணவனைப்போல் அவன் மனம் இலேசாகப் பொறாமையில் புழுங்கிற்று. நிலைக் கண்ணாடி முன்னால் நின்று கொண்டு மயிர் வகிடுகளைச் சீப்பால் சரி செய்து கொள்ளும் போது, இருபுறமும் இலேசாகத்

திரும்பி அவன் தன் இளமை வனப்பையும், உடற்கட்டையும் வியந்து கொண்ட நாட்கள் உண்டு. புதிதாக ஓர் உடை உடுத்திக் கொண்டவுடன், கம்பீரமாக வெளியே நடந்து போகும் போது, வழியில் செல்வோர் கண் பார்வை தன் மீது திரும்புவதை உணரும் போது. அவன் உள் மனம் பெருமையில் திளைக்கும். மணமாவதற்கு முன் எந்தக் கலியாணத்திலும், பொது வாழ்விலும் அவன் நடையும் மிடுக்கும் காட்டும் பாவனைகளின் கவர்ச்சியே தனி. "அந்த வாலிபன் யார்?" என்று பிறர் கேளாமல் கேட்கும் கண் பார்வையில், பிறர் கவனத்தைத்தான் அப்படி முழுவதும் கவர்ந்து நிற்பதில், அவனுக்கு ஒரு தனியான திருப்தி.

தன் முதுகைத் தானே தட்டிக் கொள்ளும் இந்தப் பெருமைக்கு பத்மாவை மணந்து கொண்டபின் ஒரு சிறு ஓட்டை விழுந்து விட்டது போலத்தான் தோன்றிற்று கண்ணனுக்கு. நண்பர்களும், உறவினர்களும், அவனுடன் இயல்பாகச் சிரித்துப் பேசிக் கொம்மாளமடித்த அடுத்த வயது வரிசைப் பெண்களும், அவனிடம் பார்த்து மௌனமாக வியந்த அந்தப் பெருமை அவனுக்குப் பத்மாவிடமிருந்து கிடைக்கவில்லைதான்.

அவன் எதிரே அவள் வேறு எந்த வாலிபனைப் பற்றியும் சற்றே பெருமையாகத் தூக்கி வைத்துப் பேசினாலும், அது அவனுக்குப் பொருத விதமாகத்தான் இருந்தது. இலேசாகக் கனியும் பொறாமை, தன்னிடம் அந்தச் சிறப்பு இல்லை என்று அவள் மறைமுகமாக உணர்த்துகிறாளோ என்ற சந்தேகம், இவைகளோடு தனக்குள் ஒரு தாழ்வு உணர்ச்சி தெரிய ஒதுங்கி விடுவான்.

கடற்கரை ஓரமாகச் சாலையில் கார் திரும்பி ஓடத் தொடங்கிற்று. கதவின் ஜன்னல் வழியே நிலாவொளி தெரிந்தது. வடிவமாகக் கச்சிதமாக உருவக் கோடிட்ட அவள் இளமை அவனை அவனுக்குத் தெரியாமல் ஒரு சிறு வேதனையில் ஆழ்த்திற்று. வங்கி வங்கியாகச் சுருண்ட ஒரு மயிர்த் திருகு, நெற்றியில், காற்றில் அசைந்தது. அதன் அசைவில் அவன் மனமும் இலேசாக நலுங்கிற்று.

வீட்டுக்கு வந்து சேரும் வரை அவன் பேசவில்லை. இதைப்போல் எண்ணங்கள் மேலே எழுந்து அடங்கி விடுவதோடு சரி. அவன் தன்னை அவளிடம் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளும் அளவுக்கு அவன் உணர்ச்சிகள் பேச்சில் வடிவம் எடுத்ததே இல்லை.

மழை இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. அன்று மாலை டென்னிஸ் ஆட முடியாது. வீட்டில் ரேடியோவின் அருகே உட்கார்ந்து கிரிக்கெட்டின் நேர்முக வர்ணனையைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவனோடு அவளும், உள்ளே காரியங்களில் சிறிது பொழுதும், அங்கே கேட்கும் கை கொட்டும் ஆரவாரத்தில் சிறிது கவனமுமாக, மாறி மாறிக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

சட்டென்று கை தட்டல் ரேடியோவின் பெட்டி அதிரும் விதமாகக் கேட்டது. வெளிநாட்டிலிருந்து வந்திருந்த கிரிக்கெட் கோஷ்டியின் முக்கியமான விக்கெட் ஒன்று விழுந்து விட்டது.

"யாருக்கு விக்கெட்? சந்தருக்குத்தானே? எனக்குத் தெரியும் —" என்று ஆவலோடு வந்து நாற்காலியின் கைப் பிடிகளில் சாய்ந்து கொண்டாள் பத்மா. முன்புறம் ஆர்வம் கனியக் கவிழ்ந்த போது, அவள் கழுத்திலிருந்து பதக்கம் சேர்ந்த சங்கிலி ஊஞ்சலாடிற்று.

"சந்தர் ஓடி வந்து பந்து வீசும் போது நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஓ... எவ்வளவு 'கிரேஸ்' அந்த அசைவில்? சிரமமே இல்லாமல் மிதப்பது போல ஒரு லாகவம்?"

அவள் மனக் கண்ணில் அந்தப் பந்து வீச்சை, அந்த உருவத்தின் நேர்த்தியான அசைவை, வெள்ளை நிற உடுப்பில் ஒளிர்ந்த யௌவனத்தை, அவள் பார்ப்பது அவனுக்குப் புரிந்தது. கிரிக்கெட் என்றால் அவளுக்குக் கொள்ளை ஆசை. அவனுக்குத் தெரியும். ஆனால் அவன் கிரிக்கெட் ஆடியதில்லை. இப்படி உட்கார்ந்து கேட்பதும்கூட ஒரு பொழுது போக்குக்காக மட்டும்தான்.

அவள் பேச்சும் பாராட்டும், சிறகுகளை விரித்துத் தரை மேல் இறங்கும் பெரிய பறவையாக, அவன் மேல் நிழல் கொண்டு கவிந்தன. அவன் மனம் ஒரு தனிமையில் தத்தளித்தது. அவளிடம் அவன் எதிர்பார்த்தது என்ன? அது அவனுக்கு ஏன் கிடைக்கவில்லை? ஒவ்வொரு சமயம் இப்படி யாரையோ அவள் பாராட்டும் போது, அவள் குரலில் வடியும் ஆர்வம் ஏன் இவ்விதமாய் அவன் வேதனையைத் தூண்டுகிறது? மாலையின் நெருடலில் ஒவ்வொரு மணியையும் நிண்டி ஜெபிப்பது போல், அவன் மனமும் ஏன் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் எண்ணித் தொட்டுத் தொட்டுக் குமுறுகிறது?

அவள் பேசிவிட்டு உள்ளே போய்விட்டாள். சமையல் அறையிலிருந்து புதிதாகச் செய்த சிற்றுண்டியின் மணம் எழுந்தது. அவள் தட்டில் ஆவி பறக்க அதைக் கொண்டு வந்து வைப்பாள்; நெய்யின் பளபளப்பும், பெருங்காயத்தின் பரிமளிப்பும் தெரிய. ஆனால் அவனால் அதை ரசித்துச் சாப்பிட முடியாதுதான். அது வருமுன் அவள் பேசிய பேச்சுக்களைத்தான் மனம் இன்னும் கொஞ்ச நேரத்துக்கு எதிரொலி எழுப்பிக் கொண்டிருக்கும்.

மாலை நேரத்தில் வீட்டுக்குத் திரும்பியதும், அன்று வந்த வாரப் பத்திரிகை புது மடிப்பின் மெருகோடு மேஜை மேல் காத்துக் கொண்டிருக்கும். எடுத்துப் பிரிக்கும் போதே பத்மா உள்ளிருந்து வந்து விடுவாள். "பக்கத்து வீட்டுக்காரர் கதை வந்திருக்கிறது. படித்துப் பாருங்களேன்!" என்று சொல்லிக் கொண்டு.

சுந்தரத்தின் கதைகளை அவன் ஆவலோடு படித்த நாட்கள் உண்டு. அவற்றில் தெரியும் மெல்லிய மன உணர்வுகளை, கருத்துச் செறிந்த வர்ணனைகளை ஆசையாகப் படிப்பான். ஆனால் கொஞ்ச நாட்களாகத்தான் அவனுக்கு அது அலுத்து விட்டது. பத்மா அந்தக் கதைகளைப் படித்து விட்டு, சுந்தரத்தைப் பற்றி அவனிடம் குறிப்பிடத் தொடங்கியதிலிருந்துதான்.

பத்மா அதற்குள் உள்ளே போய் உடை மாற்றிக் கொண்டு வந்து விட்டாள்; வெளியே



"நாலாவதும் பெண்ணா? என்ன பேரு?"
"ஜன கண மன!"

குழந்தையை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்து வாயைப் பிரித்துப் பார்த்த போது அவன் சந்தேகம் நிச்சயமாயிற்று.

"குழந்தைக்கு டிப்தீரியா — ஆன்டிடாக்ஸின் இஞ்செக்ஷன் போட்டிருக்கிறீர்களோ?" அவன் முகத்தில் கவலைக் கோடுகளுடன் சிறு கடுகடுப்பும் கலந்திருந்தது. தன்முகமேல் திரும்பிய பார்வையில், அந்தக் கேள்வியின் அழுத்தத்தில், சுந்தரத்தின் மனைவிக்குச் 'சில்'லென்று ஏதோ உள்ளே கத்தி இறங்கிற்று.

"இல்லை—"

"உடனே கிளம்புங்கள். 'டிப்தீரியா' என்று நினைக்கிறேன். உடனுக்குடன் கவனிக்கா விட்டால் உயிருக்கு ஆபத்து."

குழந்தையின் கன்னங்கள் மங்கிச் சுழன்றன. கால்கள் பூட்டு விட்டு உடம்பு ஆடிற்று. அவள் தாய் அவளை வாரி மடியில் போட்டுக் கொண்டாள். அழுகையும் பயமும் ஒன்று சேர்த்து அழுத்துகையில் தொறுங்கும் குரல். திரும்பிப் பாராமல் அவன் டாக்ஸிக்காக ஓடினான்.

எழும்பூர் ஆஸ்பத்திரியில் சேர்த்து, ஊசிகளில் 'ஸீரம்' இறக்கி, பன்னிரண்டு மணி நேரம் வரை நம்பிக்கை ஊசலாடி, டாக்டரின் தைரியமான பதில் கிடைத்து அவர்கள் வீடு திரும்பும் போது இரவு மணி பத்து. வரும் வழியிலேயே சுந்தரத்துக்கு உடனே திரும்பும் படி தந்தியும் கொடுத்து விட்டு வந்தார்கள்.

வியர்வையில் நனைந்த உடுப்புக்களைக் களைந்து விட்டு, முதுகிலும் முகத்திலும் தண்ணீரை வாரி இறைத்துக் கொண்டு, ஆயாசம் தீரத் துண்டை வைத்து அழுத்தித் துடைத்தபடி வந்தான் கண்ணன். முழங்கை மேல் உயர்ந்த கைகளின் கிண்ணத்தில் கன்னம் அழுத்த பத்மா உட்கார்ந்திருந்தாள். அருகே போய் அவள் தோள் மேல் விரல்களை வைத்துப் பரிவாக அழுத்தினான்.

"இனி மேல் கவலை இல்லை. குழந்தையைப் பற்றி. பயப்படாதே."

திக்பிரமை பிடித்தவள் போல் அமர்ந்திருந்தவள் நிமிர்ந்து பார்த்தாள். சற்று முன் தோள் மேல் பதித்த அவன் கைகளின் மீது அவளது பார்வை விழுந்தது. மின் விளக்கின் ஒளியில் அவனுடைய அகன்ற மார்பும் திரண்ட தோள்களும், அவனது அழகையும் கம்பீரத்தையும் எடுத்துக் காட்டுவன போல் இருந்தன. கண நேரம் அவனைப் பார்த்த படியே உட்கார்ந்திருந்தாள்.

அந்த அழகும் வனப்பும் அவளுக்குப் புதிதல்ல. அதன் மீது அவள் கொண்ட உரிமையும் புதுப் பெருமை இல்லை. ஆனால் அன்று அவன் காட்டிய மனத்திண்மை, அவசரத்துக்குக் கலங்காத உறுதி, தன்னை மறந்து ஈடுபட்ட உழைப்பு — இவைகள் பின்னணியில் நின்ற போது, அந்தத் தோற்றத்துக்கு ஒரு புது மெருகு தெரிவது போல இருந்தது அவளுக்கு.

சட்டென்று அவள் கண்கள் நீரால் நிறைந்தன.

அவன் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். மிகுந்து நின்ற உணர்ச்சியில், தோய்ந்து எழுந்த பெருமிதத்தில், அவள் குரல் உடைந்து வெளிப்பட்டது.

"ஓ! நீங்கள் சரியான சமயத்தில் கண்டு பிடித்து உதவியிருக்கா விட்டால் குழந்தை— என்னால் நினைக்கவே முடியவில்லை."

அவன் விரல்கள் அவள் முதுகில் ஆதரவாகத் தாளமிட்டன. அவள் குரல் இன்னும் நடுங்கிற்று. ஆனால் முகத்தில் புது ஒளி வீசிற்று.

"அப்பப்பா, உங்களை நினைத்தால் எனக்கு எத்தனை பெருமையாக இருக்கிறது? நான் உண்மையிலேயே பெரிய அதிர்ஷ்டசாலி."

அவன் புருவங்கள் ஒரு விறுடியில் உயர்ந்து நெறிந்தன. அவன் மனத்துள் அந்தப் பேச்சு, எதிர்பாராமல் தெறித்து வந்த அந்தப் பாராட்டு, ஆரோக்கியமாக விழுந்தது. ஒரு நிமிடம் அந்தத் திகைப்பிலும், வியப்பிலும், அவனைக் கொக்கி போல இழுத்து வளைத்துக் கொண்ட அந்த உணர்ச்சியில், அவனால் பேச முடியவில்லை.

அதிலிருந்து சுழன்று அவன் பேசிய போது அவன் குரல் கரகரத்துக் கனமாய் இறங்கிற்று.

"ஸோ, எனக்கும் உன் பாராட்டுதல் உண்டா பத்மா? பிறரைப் பாராட்டித் தான், மறைமுகமாய் அவர்களோடு என்னை ஒப்பிடத்தான் உனக்குத் தெரியும் என்றிருந்தேன். என்னிடம் இல்லாததைத்தான் சுட்டிக் காட்ட உன்னால் முடியும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்."

நெடுநாளாகப் புதைந்து நின்ற ஆத்திரம், கோபம், தவிப்பு எல்லாம் புகையாகப் பொங்கிச் சுருண்டு எழுந்தது. தணிய இயலாத பசியாக வடிவெடுத்து, அவளை உந்தித் தள்ளிற்று.

சட்டென்று அவனை உதறிக் கொண்டு பின்னடைந்தாள் பத்மா. அவன் கேள்வியின் முழுப் பொருள் புரிந்த வேதனையில் — அதை அவள் உணர உணர அதன் வேகம் அதிகரிக்க — இதழ்கள் பொரிந்து தவித்தன. கண் இமைகள் எகிறி விடுவது போலத் துடித்தன.

"என்ன பேச்சுப் பேசுகிறீர்கள்? எப்படி இந்த மாதிரி ஒரு வார்த்தை சொல்ல மனம் துணிந்தது உங்களுக்கு?"

அவள் முகம் விட்டு விட்டுச் சிவந்தது. திடீரென்று ஓர் அவமான உணர்ச்சிக்கு அவளை



அடேயப்பா, வளர்ச்சியின் உச்ச தசை!
இப்படியொரு மகத்தான மாறுதலை
விளைவிக்கமுடியுமா ஒரு டானிக்?



# ஆம், வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரிமின்*

இன்க்ரிமின் டானிக் பிரத்தியேகமாகப் பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிருதுவான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றி, வாட்டசாட்டமாக வலுவோங்கச் செய்கிறது. சாப்பிடும் புரத சத்து அனைத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுகிறது இன்க்ரிமின். நம் உணவில் இல்லாத ஒரு முக்கிய அமினோ அமிலம் செறிந்துள்ள டானிக். வளரும் வயதினிலே (4 வாரம் முதல் 14 வயது வரை) அன்றாடம் கொடுங்கள் ; செர்ரிப் பழச் சுவை ததும்பும் இன்க்ரிமின். மறவாதீர்கள் ;

## இதுவே கண்கண்ட வளர்ச்சிப் பருவம், இன்க்ரிமின்* பருவம்

◂ பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரிமின் ஸிரப்

இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ்
▾









Lederle

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.
உலகெங்கும் மதிப்புக்குப் பாத்திரமான ஒரு பெருமைமிகு லெடர்லி தயாரிப்பு இன்க்ரிமின்.
லெடர்லி டிவிஷன், ஸையனமிட் இந்தியா லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 6577, பம்பாய்-18.

*அமெரிக்கன் ஸையனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC.6-140 TH

அவன் ஆளாக்கி விட்டது போன்ற தவிப்பு: விழிகளில் மங்கிய தழலாகக் கனியும் ஒளி.

"நான் சொன்னதில் தப்பு உண்டா, பத்மா? நீயே நினைத்துப் பார். எவ்வளவு தடவைகள், எத்தனை பேரை, அவர்களுடைய பண்புகளை, என் முன் பாராட்டிப் பேசி யிருக்கிறாய்? என்னிடம் அவைகள் இல்லை என்பதைத்தானே மறைமுகமாகச் சுட்டிக் காட்டி இருக்கிறாய்?"

ஓர் அடி முன்னாலும் வந்து அவன் தோளைப் பிடித்துக் கொண்டாள் பத்மா.

"போதும். இப்படி எல்லாம் சொல்லி என்னை வதைக்காதீர்கள். உங்களிடம் நான் அப்படி ஏதேனும் சொல்லி இருக்கலாம். ஆனால் நீங்கள் நினைக்கிறபடி நான் ஒரு நாளும் அதற்கு அர்த்தம் கொடுத்ததில்லை. அவைகள் உங்களிடம் இருக்கவாமோ என்று நான் ஆசைப்பட்டிருக்கலாம். அவைகளை உங்கள் மேல் கற்பனையாகப் பொருத்திப் பார்த்து எண்ணி இருக்கலாம். உங்களை இன்னும் சிறப்பாக, இன்னும் முழுமையாக, நினைத்துப் பார்க்கும் ஆசைதான் அது. அந்த ஆவல் மட்டும்தான் இது. நீங்கள் நினைத்ததைப் போல், சொல்லுவதைப்போல..."

அவள் குரல் விக்கிற்று. அவன் அணைப்பில் கரைந்து விடுவாள் போலத் தோன்றியது. ஒரு குழந்தையைப் பரிவாகத் தட்டிக் கொடுக்கும் மென்மையோடு, அவன் அவளை மிருதுவாக நீவிக் கொண்டே நின்றான். புயல் ஓய நெடு நேரம் ஆயிற்று.

ஊரிலிருந்து கண்ணனின் தாயார் வந்திருந்தார்.

அந்த வயதிலும் என்றோ அழகின் வடிவமாக இருந்த சாயல் தெரியும் அவரிடம்.

அவளுக்கு ஓர் ஆசை: மாமனார் எப்படி இருந்திருப்பார் என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்று. சாப்பாடு முடிந்த பிறகு, அலுவல்களின் அசதி தீர உடலைப் புரட்ட, மாமியார் வாசற்படியில் தலையை வைத்துப் படுத்திருந்தார். கால் அருகே உட்கார்ந்து அவருக்காகப் புத்தகம் படித்துக் காட்டிக் கொண்டிருந்தவள் சட்டென்று நிமிர்ந்தாள்.

"மாமி, உங்களை ஒன்று கேட்கலாமோ?"

"சொல்லேன் —"

"இவருடைய அப்பா எப்படி இருப்பார்? நான் பார்க்க வருவதற்குமுன் அவர் போய் விட்டார். அவர் அந்த நாளில் எப்படி இருந்திருப்பார்? சொல்லுங்களேன்."

மாமி அவள்புறம் திரும்பினார். அந்த நெற்றியை குங்குமமும் புது மஞ்சளும் பனிச்சென்று அழகுபடுத்திய நாட்கள்? நல்ல இனிமையான இசையைப் போல அருகே இருந்து நெஞ்சைத் தடவிக் கொடுக்கும் நினைவுகள்?

"என் பெட்டியிலே வலதுபுறம் புடவைக்குக் கீழே அந்த நாளில் அவர் எடுத்துக் கொண்ட படம் ஒண்ணு இருக்கு. வேணுமானால் அதைப் பாரு. ஆனால்—"

"ஆனா என்ன மாமி?"

"அதுலே நீ நெனைக்கிற மாதிரி எதுவும் இருக்காது. என் கழுத்திலே அவர் மூணு முடிச்சுப் போட்டப்போ அம்மா குறைப் பட்டுக் கொண்டது எனக்கு நன்னா ஞாபகம்



"சற்று நேரம் வெளியே போய் இருந்து விட்டு வருகிறாயா? உன் சென்ட், பவுடர், ஹேர் ஆயில் வாசனையில் வெங்காய வாசனையே தெரியவில்லை!"

இருக்கு — என் அழகுக்கு அவர் பொருத்தம் இல்லேன்னு. ஆனா நான் அப்படி ஒரு தடவை கூட நெனைச்சதில்லே, நாங்க ஒண்ணா வாழ்ந்த நாட்களிலே."

பத்மாவுக்குச் சுரீர் என்றது.

அந்தக் குரலில் வெறும் அன்பின் கனிவு மட்டும் இல்லை. ஒரு பிரிவு, நினைவு கூர்ந்து உருகும் வேதனை, வடிவெடுத்தது. மாமனார் மறைந்து போய்ப் பத்து ஆண்டுகளுக்கு மேல் இருக்கும். இன்னும் அந்த நினைவில் மாமியின் கண்கள் கசிகின்றன. உள் உருக்கில் மனம் குழைகிறது.

"இருட்டிலோ, பகலிலோ அவர் முகம் தவிர வேறு எதையும் என் கண்கள் நிமிர்ந்து பார்க்க எண்ணியது இல்லே. அழகையும் சாமர்த்தியத்தையும் நினைக்க எனக்கு யாரும் கற்றுக் கொடுக்க வில்லே. வாசலில் வந்து நின்று: 'அதோ ஜம்முனு உடை போட்டுக் கொண்டு போறானே அந்த மாதிரி இவர் இருந்தால் எப்படி இருக்கும்? அதோ படிப்பும் அந்தஸ்துமா இருக்கிறானே, அது மாதிரி சாமர்த்தியம் இவருக்கு இருந்தால் எவ்வளவு நல்லா இருக்கும்?' என்று நான் ஒரு நாள் கூட நினைத்தது இல்லை. அவருக்கு இல்லாத வெட்டு, அழகு, இதுகளை மனத்தில் நினைத்துப் பொருத்திப் பார்த்து ஏங்க நான் கற்றதில்லை. கடைசி வரையில் அவர் மட்டும்தான் எனக்கு ராஜா. அவருக்குப் பின்புறம் என் கண்ணுக்கு எந்த உருவமும் பட்டதில்லே."

கரையும் நெஞ்சு, கரை ஒதுங்கும் நெஞ்சு, நினைவுகள் புரண்டெழும் எண்ணப் பெருக்கு இவற்றில் மாமி கலந்து விட்டிருந்தாள். கண்ணில் துளித்த நீர் மானசீகமாக அந்தப் பாதங்களை அர்ச்சித்துக் கொண்டிருந்தது. அதற்கு உருவம் தேவையில்லை.

பத்மா அசைவின்றி அமர்ந்திருந்தாள். அவள் மனத்துள் என்னென்னவோ எண்ணங்கள் கோலமிட்டன. அது வரை புரியாத ஒன்று அப்போது உருவமெடுத்தது. அவளுக்குப் புரிவது போல வந்து நிற்கும் உணர்வு. அதில் மனத்தில் ஒரு தனியான தெளிவு.

முகத்தில் புது ஒளி வீச, மாமியாரின் கால்களைத் தொட்டுத் தடவி, பாதங்களின் அருகே வந்ததும் விரல்களை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

# ராஜாஜிக்கு ஒரு கடிதம்

“வெற்று வார்த்தைகளில் காலத்தை வீணாகச் செய்யாமல், பயன் உள்ள தூய்மையான செயல் மூலம் தருமத்தை அனுசரிப்பவனே ஆண்டவனுடைய அன்புக்கு உரிய தொண்டன்” என்ற தங்களுடைய மெய் வழியைத் தொடர்ந்து பின்பற்றத் தங்களுடைய புனிதமான 92வது பிறந்த நாளில் பணிவோடு எங்களை அர்ப்பணித்துக் கொள்கிறோம்.

எங்கள் நிறுவனத்தில் உள்ள தொழிற் சங்கம், சென்ற 29.11.69 வரை கம்யூனிஸ்டுகளின் அரக்கப் பிடியில் சிக்கித் தவித்துக் கொண்டு இருந்தது. 'தொழிலாளர்', 'தொழிலாளர்' என்று வாய் கிழியக் கத்திக் கொண்டே அவர்களுடைய நலன்களுக்குத் தீங்கு விளையும் வகையில் இந்தத் 'தோழர்கள்' இயங்கி வந்தனர். முன்னாள் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. ஸ்ரீமான் எம். கல்யாணசுந்தரம்தான் இந்தத் தொழிற் சங்கத்துக்கு இதுவரை தலைவராக இருந்து வந்தார். ஆனால் தேசிய உணர்வு கொண்ட தொழிலாளர்கள் இந்தக் கம்யூனிஸ்ட் மாயை என்ன என்பதைப் புரிந்து கொண்டு விட்டனர். அதனால் 30-11-69 முதல் தென் சென்னை மின்சார ஊழியர்கள் சங்கத்தை மாஸ்கோ பக்தர்களின் பிடியிலிருந்து முழுமையாக விடுவித்து, சங்கம் ஒரு தூய ஸ்தாபனமாக இயங்கும்படி செய்துள்ளனர். எங்கள் கம்பெனியில் வேலை பார்க்கும் கீழ்க் குறித்த நண்பர்களைச் சங்கத்தின் நிர்வாகப் பொறுப்பில் ஒரு மனதாகத் தேர்ந்து எடுத்து நியமித்துள்ளனர்: ஸ்ரீமான்கள்: ஏ. வி. ராஜாராம் - தலைவர்; ஜெ. ராமமூர்த்தி, ஜகந்நாதன் - துணைத் தலைவர்கள்; பி. ஆர். பாலசுந்தரம் - செயலாளர்; விஜயபாரதி - துணைச் செயலாளர்; சந்திரசேகரன் – பொருளாளர், மற்றும் பத்தொன்பது பேர் கொண்ட நிர்வாகக் கமிட்டியினர்.

நாங்கள் தாய்நாட்டுக்கும் ஆண்டவனுக்கும் கட்டுப்பட்டு இறக்குமதி செய்யப்பட்ட, செயல் முறைகளுக்கு ஒவ்வாத அரசியல்' எதிலும் சம்பந்தப்படாமல் எங்களுக்கு உரிய பணிகளை இதய பூர்வமாக நிறைவேற்றி, எங்கள் நிறுவனமும், நமது பாரத தேசமும் பயனும் பூரிப்பும் அடையும் வண்ணம் ஆக்க ரீதியில் உழைப்போம் என்று உறுதி கூறுகிறோம். இதையே தங்களுக்குப் பிறந்த தினக் காணிக்கையாகப் பணிவோடு சமர்ப்பிக்கிறோம். தங்களுடைய நல்லாசிகளை நாடி ஆர்வத்தோடு நிற்கிறோம். நமஸ்காரம்.

திருச்சி-17 விஜயபாரதி
12-12-69 பாலசுந்தரம்

# வட்டமேஜை

* பரிசு பெறும் கடிதம்

'பசுமைப் புரட்சி' என்ற பெயரில் நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து நிலத்தைப் பறித்து நிலம் பயிரிடுவோருக்கே நிலத்தை வழங்கத் தீர்மானித்துச் சட்டம் கொண்டு வர இருக்கிறது அரசாங்கம். இதற்கு அரசியல் சாசனம் குறுக்கே நிற்கிறது என்பதால் குடிமகன் ஒவ்வொருவனுக்கும் சொத்துரிமையை அளிக்கும் அரசியல் சாசனத்தின் ஒரு பகுதியையே எடுத்துவிட யோசித்து வருகிறது. தலைவலி என்பதால் தலையையே எடுத்து விடுவது விவேகமா? இவ்வாறு செய்வதற்கு வெளிப்படையாகக் கூறப்படும் சமாதானம் மக்களிடையே நிலவும் ஏற்றத் தாழ்வை அகற்ற வேண்டும் என்பது. ஏற்றம் என்று ஒன்று இருந்தால்தானே அதை அடைவதற்கான முயற்சி இருக்கும்?

ஏழைகளின் வாழ்வு வளம் பெற வேண்டுமென்று அரசாங்கத்துக்கு உண்மையிலேயே அக்கறை இருக்குமானால் கிராமப்புறங்களில் சிறு தொழில்களை ஏழை மக்களுக்கு அமைத்துக் கொடுத்து, அதன் மூலம் உற்பத்தியையும் அவர்களது ஊதியத்தையும்பெருக்குவதே முறையாகும். பள்ளத்தில் இருப்பவனை மேலே ஏற்ற வேண்டுமே ஒழிய மேலே இருப்பவனையும் பள்ளத்தில் இறக்கிவிட வேண்டுமென்று கோருவது விவேகமாகாது.

புதுவை,
13–12–69 எஸ். ரங்கராமானுஜன்

* வேலை இல்லாமை காரணமாக அவதியுறும் மாணவர்களுள் நானும் ஒருவன். படித்துப் பட்டம் பெற்றும் கயிறு அறுந்த பட்டம் போல் அலைவுறும் நிலையில் நாங்கள் இருக்கிறோம். ஒருசில நாட்களுக்கு முன்னர் தமிழக மின்சார இலாகாவினர் கிளார்க்குகளும் டைப்பிஸ்டுகளும் தேவை என விளம்பரம் கொடுத்து அதற்கு ரூபாய் இரண்டு அனுப்பக் கோரினார்கள். ஏராளமான மனுக்களை விற்றார்கள். இன்னும் ஐந்து ரூபாய் மனுவோடு அனுப்ப வேண்டும் என்று பணத்தைப் பெற்றுக் கொண்டார்கள். ரூபாய் ஐந்து மனுவோடு அனுப்ப வேண்டும் என்று முதலில் விளம்பரத்தில் கொடுக்கப்படவேயில்லை. நிறைய மனுக்களை விற்க வேண்டும் என்பதற்காகவே இப்படிச் செய்தார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது. இவ்வாறு வேலை வாய்ப்புத் திட்டம் வியாபாரமாக மாறிவிட்டது மிகவும் வருந்தத்தக்கதொன்று. ஒரு மனுவுக்கு ரூபாய் ஏழு! ஏன் அந்த இலாகாவுக்குச் செல்வம் சேராது?

வேறு பல அலுவலகங்களுக்கு வேலை தேடி மனுப் போடும்போது நன்னடத்தை போன்ற சான்றிதழ்களை டைப் செய்து (இதற்கு ரூபாய் ஐந்து ஆகும்) அனுப்புவோம். ஒன்றும் திரும்பி வராது. அதை என்னதான் செய்வார்களோ? இரயில்வே இலாகாவானால் மனுவுடன் மூன்று அல்லது நான்கு புகைப் படங்கள் அனுப்ப வேண்டும். அதற்கும் இதே கதைதான். பதில் கூட அனுப்பாமல் வேலைக்காகத் திரியும் எங்களைப் போன்றவர்களைப் பழி வாங்குவானேன்?

ஈரோடு–2
27–10–69 ச. விசுவநாதன்

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

**பிரைவேட் லிமிடெட்**

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" 17-A, ஃபிளாங் ரோடு

ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்

**சயான் (கிழக்கு) பம்பாய் - 22 D. D.**

டெலிபோன்: **471455** - தபால் பெட்டி: **6759** - தந்தி: 'GROWRICH'

**ஜனவரி 1970க்குரிய கீழ்க்கண்ட புதிய குருப்புகள் ஆரம்பிக்கப்படுகின்றன**

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட குருப்புகள்

| குறுகிய காலம்: 25 மாதங்கள் | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 10-1-1970 | | | சேருவதற்கு கடைசி தேதி: 24-1-1970 | | |
| முதல் ஏலத் தேதி: 11-1-1970 | | | முதல் ஏலத் தேதி: 25-1-1970 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

**நீண்ட காலம்: 50 மாதங்கள் - ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு.**

**சேருவதற்கு கடைசி தேதி: 17-1-1970 - முதல் ஏலத் தேதி: 18-1-1970**

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100 - | 5,000/- |
| LTB | 50 - | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 மணி வரை
மாலை 4 மணி முதல் 7-30 மணி வரை

**வார விடுமுறை: திங்கட்கிழமை**

*தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:*

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி 414, சென்னை-5

கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டில்லி

தெளிவான விலாசதாரர்களுக்கு விதிகள் அடங்கிய புத்தகம் இலவசமாக அனுப்பப்படும்

சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# திட்டம்

## (யோஜனாவின் தமிழ்ப் பதிப்பு)

திட்டக் கமிஷன் சார்பில் இரு வாரங்களுக்கொரு முறை பிரசுரிக்கப்படுகிற "திட்டம்" தமிழ் சஞ்சிகை ஐந்தாண்டுத் திட்டங்களை விளக்கும். நாட்டின் பல்வேறு பகுதிகளில் நடைபெறுகிற அபிவிருத்தி நடவடிக்கைகளையும், முக்கியமாகத் தமிழ் நாட்டில் நிறைவேறி வருகிற வளர்ச்சித் திட்ட ஏற்பாடுகளையும் தமிழ் மக்கள் தெரிந்து கொள்வதற்காக தமிழிலேயே விவரமாகப் பட விளக்கங்களுடன் இது எடுத்துரைக்கும். திட்ட வேலைகள்பற்றி எம் சொந்த நிருபர்களின் அறிக்கைகளும், தள ஊழியர்களின் பரிசீலனை அறிக்கைகளும், ஆராய்ச்சியாளர் கருத்துக்களும் இதன் சிறப்பு அம்சங்கள்.

தேச வளர்ச்சி, பொருளாதார நடவடிக்கைகள் முதலியவை பற்றி நேயர்கள் சொந்தமாகக் கட்டுரைகள் எழுதி அனுப்பினால் அவை வரவேற்கப்படும். விளம்பரங்களும், வரவேற்கப் படுகின்றன.

**விலை தனி இதழ் 25 காசு ஆண்டு சந்தா ரூ. 5**

**ஆசிரியர் அலுவலகம்,**
**யோஜனா பவன்,**
**பார்லிமென்ட் தெரு,**
**புது டில்லி-1**

**விளம்பரம், விற்பனை, வினியோக முதலியவைகளுக்குத் தொடர்பு கொள்ள**

**பிஸினஸ் மானேஜர்**
**பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்**
**பாட்டியாலா ஹவுஸ்**
**புது டில்லி-1**

davp 69/405

# இலவசம்

ஒவ்வொரு 450 கிராம்
டின்னிலும்
இரண்டு உபஹாரங்கள்
• ஒரு நவீன
ஸ்டெயின்லஸ் ஸ்டீல்
கரண்டி
• ஒரு புதிய பிக்னிக் டம்ளர்




# கோகோ மால்டீன்

பூர்ண சத்துணவு
கோகோ மால்டீன் லேபாரேடரீஸ்
உரிமையாளர்: டிரேட் லிங்க்ஸ் பிரைவேட் லிமிடெட், 46 பூனா ரோட், புது டில்லி-5

TL-NP-132TL

பிராந்திய-விற்பனை ஆபீஸ்: கோகோ மால்டின் லாபரேடரீஸ்
உரிமையாளர்கள்: டிரேட் லிங்க்ஸ் பிரைவேட் லிமிடெட், 43, ஜெனரல் பீட்டர்ஸ் ரோடு, சென்னை-2

---



கேசத்தை நன்கு பராமரித்து நல்ல அழகுடன் விளங்க உதவுகிறது!

## பெங்கால் கெமிகல்ஸின்

# காந்தாரிடைன்

## ஹேர் ஆயில்

கேசத்தைப்பற்றி அக்கறையுள்ளோர் பெங்கால் கெமிகல்ஸ் காந்தாரிடைன் ஹேர் ஆயிலைத்தான் நினைக்கிறார்கள். பிசுக்கற்றது. கேசம் நன்கு பளபளப்பாகவும், நீண்டு அடர்த்தியாகவும் வளர்கிறது. கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. ஒவ்வொரு வீட்டிற்கும் மிகவும் இன்றியமையாதது.



## பெங்கால் கெமிகல்

கல்கத்தா ○ பம்பாய்
கான்பூர் ○ டெல்லி





---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharatha Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M 4392

Registered as a Newspaper in Ceylon

27 countries import JUBILEE RIMS .. An enviable honour. Yet it is the result of the satisfactory service that JUBILEE RIMS offer. Sturdy construction and consistent quality are the hall-marks of JUBILEE RIMS. No wonder, they are used as original fitment by leading bicycle manufacturers in many Asian and African countries

# 27 COUNTRIES COURT JUBILEE RIMS!

*Manufactured by the leading rim exporters of India:*

**THE WHEEL & RIM CO. OF INDIA LTD.**

Huzur Gardens, MADRAS-11

*also marketing:*

**SADDLES, SPOKES, HUBS & GEAR CASES.**

**a unit of the Amalgamations Group*

